ஓம் பரப்பிரம்மணே நம:

64-பக்கங்கள்.

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) [REGISTERED

| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸஹு வைகாசிமீ | இதழ் 74. |
|---|---|---|
| Vol. 7. | 1932-ம்ஹு மேமீ | No. 74. |




"சீரியரோன்னலும் தீயரோன்னலும் சேரினத்தியல்பினுற் சேர்ந்த நாமமே" என்றார் பெரியார். ஸகவாச தோஷத்திற்குத் தக்கபடி குணங்களும் அமைகின்றன. இளவயதுமுதல் ஆஸ்திக பக்தியைக் கற்பித்து வந்தால், பெரியவர்களானபின் எவ்வித கெட்ட எண்ணமும் வித்யாஸமான அபிப்பிராயமும் உண்டாகா. எது தியானிக்கப்படுகிறதோ அது வித்தியாவது ஸகஜம். குரங்கையே நினைத்துக்கொண்டிருப்பவன் குரங்குப் புத்தியையே யடைவான். மரணகாலத்தில் எந்த நினைவு அதிகம் மேலிடுகின்றதோ அந்நினைவின்படியே மறு ஜன்மமும் லபிக்கும். மஹா தபஸ்வியாகிய பாதர் தமது அந்தியத்தில் தாம் வளர்த்த மான் தம்மைச் சுற்றிச் சுற்றி வருவது நோக்கித் தமக்குப் பின் மானின் கதி என்னவாமோ என்ற நினைவுடனே ஆவி துறந்தார். அந்த நினைவின் தோஷத்தால் மறு ஜன்மத்தில் அவர் மானுகப் பிறக்க நேர்ந்தது. எனவே, தியானத்தின் மகிமையைச் சொல்லி முடியாது. தியானமே சிருஷ்டிக்கு ஹேது. நம்முடைய தியானம் எப்படியோ, அப்படியே நாம் ஆகிவிடுகிறோமென்பது விவேகிகளின் கொள்கை. இதற்காகத்தான் பகவந்நாமத்தை ஸதா சொல்லிக்கொண்டும், பகவானை எப்போதும் தியானித்துக்கொண்டும் ஸத் ஸகவாசத்தில் காலம் கழிக்கவேண்டுமென்கிறோம்.

❖

"மதம் கெட்டால் பதம் கெடும்" மதகிரந்தங்களில் ஞானம் அவஸியம். அவற்றை அடிக்கடி படிக்கவேண்டும். நம்மை நல்ல வழியில் நடத்திக் கிரமப்படுத்துவதற்கு ஆதாரமாயுள்ள அந்த கிரந்தங்களில் அவநம்பிக்கை யுண்டாகும்படி செய்யும் எவ்வித ஸம்பாஷணையையும் தவிர்ப்பது கடமை. மதகிரந்தங்

களைப் பரிஹரிக்கும் விஷயத்தில் ஒருவித உத்ஸாகத்தைக்கொள்வது தன்னைத்தானே கெடுப்பதுபோலாகும்.

ஃ

"காக்கையும் நாயும்" எச்சிலுக்குக் காத்துக்கொண்டிருக்கும். குயிலும் யானையும் அப்படிச் செய்யா. கோகிலம் வீடுவீடாய் நுழைந்து கூவாது. அதன் இனிய ஸ்வரத்தைக் கேட்க ஜனங்கள் பாக்கியம் பண்ணியிருக்க வேண்டும். இதைப்போல் புத்திசாலிகள் அவிவேகத்தன்மையுடாய்ப் பிறர் மனைகள்தோறும் நுழையார். வம்பு பேசார். மதியீனர்கள் காக்கைகளைப் போல் ஒவ்வொரு வீட்டிலும் சென்று அவர்களுடைய எச்சில் சோறாகிய வம்புகளைக் காதார வுண்டு களிக்கின்றனர். நாய் வாலைக் குழைத்துக்கொண்டு சோற்றுக்குக் காத்திருப்பதுபோல் யானை யாரையும் ஆகாரத்திற்காகக் கெஞ்சாது. இதைப்போல் மேன்மக்கள் பிறர் தயவை நாடாமல் தாங்களே தங்கள் காரியத்தைச் செய்துகொள்வர். கீழ்மக்களோ யாசக வழியிற் கெஞ்சிக் காரியத்தை முடித்துக்கொள்ள நாடுவர்.

ஃ

"கோடை காலத்தில்" தாகத்தால் வருந்திய மானானது, வனத்தில் அலர்ந்து கானலைக் கண்டு அதோ நீர் இருக்கிறதென்றெண்ணி ஓடியணுகி ஏமாந்து தவிப்பதுபோல, இவ்வுலகத்தில் பிரமையால் பீடிக்கப்பட்ட புருஷன், ஆசையாகிய தாகம் கொண்டும், அதைச் சாந்தப்படுத்தும்பொருட்டு சற்று தூரத்திலிருக்கும் பொய்யான சுகத்தை நிஜஇன்பமென்றெண்ணி ஓடியடைந்தபின்னர் ஏமாந்து, முன்னிலும் பதின்மடங்கு அதிகமான தாகத்தால் பீடிக்கப்படுகிறான். மானின் அறிவும் மனிதனுடைய அறிவும் இவ்விஷயத்தில் ஒன்றாயிருக்கிறது. உலகசுகம் கானற்சலமென்று நிச்சயிக்கும் சக்தியுடையவனே புத்திமான்.

ஃ

"ஸம்ஸாரமாகிய கடலில்" ஆழ்ந்தவன் கரையேறுவது கஷ்டம். ஆயினும், பகவான் ஜீவர்கள்மீதுள்ள பரம கருணையால் தம்முடைய நாம சங்கீர்த்தனமாகிய ஓர் தெப்பக்கட்டையை அக்கடலிற் போட்டிருக்கிறார். புத்திசாலிகள் அந்தக் கட்டையை ஆதாரமாகக்கொண்டு கரையேறுகின்றனர். அஞ்ஞானமாகிய அந்தகாரத்தில் அகப்பட்ட மூடர்கட்கு அக்கட்டை தெரிகிறதில்லை. பிறர் விளக்கெடுத்துக் காட்டினாலும் அம்மதியீனர் நம்புகிறதில்லை. அவர்கள் ஸம்சாரக் கடலிலுள்ள பெண்டு பிள்ளைகளாகிய மீன்களாற் கடியுண்டும், அகம்பாவமாகிய சுறாவின் வாயில் அகப்பட்டும், மங்கையரின் மோகச் சண்டமாருதத்தில் அடிபட்டும் கஷ்டப்படுகின்றனர்.

ஃ

"தியாகம்" இது உயர்ந்த குணம். ஒருவன் தியாகம் செய்வதென்றால், எல்லாவிதமான ஸுகாநுபவங்களையும் திரஸ்கரித்து உலகத்தைவிட்டு ஓடிப்போகவேண்டுமென்பது கருத்தல்ல. உலகத்திலேயே இருந்துகொண்டு

---

ஒருவனுக்கு அவனுடைய நண்பர்களின் துணையானது பற்களுக்கும் நகங்களுக்கும் சமமாகி அவனுக்குத் துணை உதவும்.

உலகத்தின் நன்மைக்கு சக்தியானுசாரம் வழி தேடுவதென்றே அர்த்தம். பிரம்மஞானியான ஜனகரின் சரிதம் இங்கு நினைவு கூறற்பாலது.

ஃ

"இரண்டுவித நாஸ்திகர்கள் உண்டு" ஒருவகையார் தெய்வமில்லை,— விரதாதிகள் எதுக்கு என்பர். மற்றொருவித நாஸ்திகர்கள் தங்கள் மதத்தி லேயே சந்தேகம்கொண்டு இந்தக் கொள்கை தப்பு, அந்தச் செய்கை தவறு என்று ஏசுவர். நிஜபக்தியுடன் நாம் தெய்வத்தைப் போற்றவேண்டுமென்ற எண்ணம் கிடையாது. எண்ணமிருந்தபோதிலும், அதற்காக முயற்சி எடுத்துக்கொள்வதுமில்லை. இவ்விரண்டு நாஸ்திகர்களில் முன் சொன்ன நாஸ்திகர்களே சிறந்தவர்கள். ஏனென்றால், தாங்கள், இருக்கிற நிலைமையை வெளியே பகிரங்கமாகச் சொல்லுகிறார்கள். பின்னால் கூறப்பட்டவர்களோ உண்மையில் நாஸ்திகர்களா யிருந்தாலும், ஆஸ்திகர்களென்ற வெளிவேஷம் பூண்டு தெய்வம் இன்னதென்று அறியும் பொருட்டுச் சிறிது நேரம் கூடச் செலவழிக்காமல் பேருக்கும் கீர்த்திக்கும் ஆசைகொண்டு வீணாக வாயளவில் மட்டும் கத்துகிறார்கள். முன்னாற் சொல்லப்பட்டவர்கள் கபடமற்று தம் உள்ளத்து உண்மையை வெளியிற் காட்டுபவர்கள். பின்னால் கூறப்பட்டவர் களோ தங்களைப் பக்தர்களென்று சொல்லிப் பிறரை ஏமாற்றுகின்றனர்.

ஃ

"தெளிவான நல்ல தண்ணீரை" யுட்கொள்ள நினைப்பவன் ஜலத் தைக் கலக்காமல் மெதுவாக எடுத்துப் பானம் செய்யவேண்டும். அப்படிக் கின்றி நீரைக் கலக்கினால் உள்ளே யிருக்கும் மணல், மஷ்டு, துரும்பு, தூசி யெல்லாம் வெளியே வரும். அதுபோல் சுத்தனாயிருக்க வெண்ணுகிறவன் ஈசுவரனிடம் முழு நம்பிக்கைகொண்டு அவசரப்படாமல் தினந்தோறும் பக்தி செலுத்தவேண்டும். அதைவிட்டு வீண் தர்க்கங்கள் செய்வதால், பத்தி கலங்கி ஈசுவரனிடம் செல்லாமல் தடுமாறிப்போகு மன்றோ?

ஃ

"ஸாக்ரடிஸ்" என்னும் மேதாவியின் வாக்கியம் :—எவனுக்குப் பொருள் தேவையில்லையோ அவனுக்குத் தெய்வத்தன்மை யுண்டாகிறது. இதன் அர்த்தம் யாதெனில், எவன் உலக வஸ்துக்களில் விருப்பமில்லாமல், பேராசைப்படாமல், உள்ளது போதும், வேறு பொருள்கள் தேவையில்லை யென்று திருப்தியடைகிறானோ, அவன் சிறிது சிறிதாய் தெய்வத்தன்மை யடைகிறான் என்பதாம். அதாவது, தெய்வத்தன்மையை யடைவதற்குத் திருப்தி வேண்டுமென்பது பெறப்பட்டது.

ஃ

"ஜனன மரணம்" என்பன துக்ககரம். ஜனனமானது சாதாரணமாய் ஸந்தோஷகரமாயும், மரணமானது துக்ககரமாயும் சொல்லப்படுகின்றன.

---

ஒரு தீங்கு அது மாற்றமுடியாதபடி ஏற்பட்டிருக்கிறதென்று உனக்குத் தோன்றுமானாலும், அதை அப்படியே நம்பிக்கொண்டு உன்னைப் பலஹீனப் படுத்திக்கொள்ளாதே.

உலகத்தில் ஸகல மனிதர்களும் சிசு பிறந்ததென்று கேட்டவுடனே ஸந்தோஷ மடைந்து அருகே யிருப்பவர்களுக்கு சர்க்கரை வழங்குகிறார்கள். யாரேனும் மரித்தார்களென்றால் வியஸனம் மூடிக்கொள்கிறது. சிசுவாயினும் பெரியவ ராயினும் விருத்தராயினும் மரணத்தின்பாற் படுவது துக்ககரமே. எத்தனை ஏழையாயினும், அவன், பிள்ளை பிறந்த தென்பதைக் கேட்டுக் களிப்படைகி றான். இது ஸர்வ ஜனங்களும் ஆசரிக்கும் வழக்கமாயிருக்க, விவேகிகள் ஜனன மரணம் ஆகிய இரண்டும் துக்ககரமென்று கூறக் காரணமென்ன?

ஃ

"ஜனனமில்லையேல் மரணமில்லை" ஆதலின், மரணமாகிய துக்கத்தை யனுபவிப்பதற்கு ஜனனமே காரணமாயிருக்கிறது. ஞானிகள் ஜனன மரணம் என்னும் வியவகாரமே இல்லையென்று சாதிப்பதால் அவர்களுக்கு மேலே கூறிய துக்காதிகள் கிடையாது. உற்பத்தி—லயம் என்பன சரீரத்துக்கே யன்றி ஆத்மாவுக்கில்லை. ஆத்மா பிறந்ததென்றும் இறந்ததென்றும் வியவ காரமில்லை. ஆதலின், யதார்த்த மனிதன், அதாவது தன்னைத்தான் அறிந்து கடவுளருள் பெற்றவன் ஜனன மரண துக்கங்களுக்குப் பயப்பட மாட்டான்.

ஃ

"சமுத்திரமானது" பலவித முத்துக்களையும் ரத்தினங்களையும் தன்னில் கொண்டிருந்தாலும், அதன் ஜலம் பானத்திற்கு உபயோகப்படாமல் உப்பு நிறைந்திருக்கிறது. இதைப்போல் மனிதர்கள் எவ்வளவு கல்விமான்களாயும் செல்வவான்களாயும் இருந்தாலும், பகவத்பக்தி யில்லாவிட்டால் அவர்களின் ஜென்மம் வியர்த்தமேயாம். எப்படி ஸமுத்திர ஜலத்தை மேகங்கள்கொண்டு போய் சுத்த ஜலமாக்கிப் பலருக்கும் பயன்படுத்துகின்றனவோ, அதுபோல் பல பெரியோர்களின் ஸகவாசமும் மத கிரந்தங்களும் மனுஷ்யனுடைய ஞானத்தை விருத்தி செய்து, அவனது ஹிருதயத்தை சிரேஷ்டமாக்கி அவன் ஜென்மத்தைப் பயன்படச் செய்கின்றனவென்று உணரக்கடவோம்.

ஃ

"பகவத் பிரார்த்தனை" ஸர்வ வல்லமையுள்ள கர்த்தனே! உனதருளால் இன்றையபொழுது நற்பொழுதாய் வெற்றிக்கு இடமாகுக. யாங்கள் இம்மாய வாழ்க்கையைப்பற்றிய மாமோகங்களை வெல்லும் பொருட்டு உனது பாத கம லங்களையே என்றென்றும் தவறாது நாடும்படி உதவி செய்வாய். மனுஷ்யப் பற்றினின்றும், நீச சேவையினின்றும் எம்மை ரக்ஷிப்பாயாக. இவ்வுலக ஆடம்பரங்களிலேயே எமதுபுத்தியைச் செலுத்திப் பந்தப்படுத்துகிற யாதொன் றும் எம்மை யணுகாதிருக்க அருள்வாய். யாம் செலுத்த வேண்டியிருக்கிற கடமைகள் யாவற்றினும் சிறந்த தெய்வீகக்கடமை யொன்றுள தென்பதை யாமென்றும் மறவாதிருக்க அருள்வாய். எமது வாழ்க்கை யெல்லாம் உனது திருக்கைங்கரியத்தின் பொருட்டு அர்ப்பிதஞ் செய்வதே கடமையென்று உணர்த்துவாய். இக்கடமையைச் செலுத்தும் வழியில் யாம் தவறாமலும்,

---

கல்வியும், கடவுளும், இயற்கையும் இம்மூன்றும் ஒன்றே. இவையே பேரின்பம் பயப்பன. கல்விக்குக் கரையில்லை; கடவுளின் தீயாள மனோ ரம்மியத்திற்கு எல்லையில்லை. இயற்கையின் அழகுக்கு நிகரில்லை. கடவுள்— கல்வி—இயற்கை—இம்மூன்றினுடைய அழகையும் முற்று முணர்ந்தவரில்லை.

புறழாமலும் நேரே செல்லும்படி எழுச்சியும்—ஊக்கமும்—உறுதியும் தந்தருள்வாய். எல்லாவற்றினுள்ளும் எமது தெய்வக் கடமையே மேம்பாடுடையதென்றும், தனகனகளுதிவுலக இன்பங்களைப் பார்க்கிலும் சத்தியமே சிறந்ததென்றும், மனிதருடைய அங்கீகார விருப்பங்களைப் பார்க்கிலும் உனது கடாக்ஷ வீக்ஷண்ணியமே அதியுசிதமென்றும் புல்லறிவினராகிய அடியோம் உணர்ந்தொழுகக் கடாக்ஷிப்பாய். உனது கருணையின் பொருட்டும், பிரியமான யாவற்றுள்ளும் அதி பிரியமான நின் பொருட்டும், இவ்வுலக வைபவங்களையெல்லாம் உற்சாகத்தோடுந் தியஜிக்க அடியோங்களுக்கு நின்னிடத்து நிலையான நட்பும் பக்தியும் வைராக்கியமும் உண்டாகக்கடவது. ஓ! பரம கிருபா நிதியே! இவ்வுலகமெல்லாம் ஒருங்கே எதிர்த்து வரினும் உன் கடாக்ஷமிருப்பின் அவையாவும் ஒரு சிறு துரும்பேயன்றோ? எவ்விதமும் யாங்கள் உன்னை விட்டு அகலாதிருக்க வேண்டும். ஸகல நிர்ப்பந்தத்துள்ளும், ஹிம்ஸைகளுக்குள்ளும், சோதனைகளுக்குள்ளும் உனது திருக்கைங்கரியங்களை விடாது உனது திருவருள் விலாஸத்தை ஸ்தாபித்து நிலைநிறுத்த அஞ்சாத நெஞ்சமும், ஆறுத ஆவலும் தந்தருள்வாய். உண்மையின் பொருட்டு ஆண்மையோடும் எதிர்த்து எதற்கும் சலியாத தைரியத்துடன் உன் கட்டளையை நிறைவேற்றி, பக்தி மார்க்கத்தையே பற்றி நின்று, அதற்குக் குறைவு வரின் வேண்டின பொழுது எம்முயிரையும் உன் பாதார விந்தங்களில் அர்ப்பிதம் செய்வோமாக. உன்னைத் துதிப்பதின் பொருட்டே யாங்கள் ஜீவித்திருப்போமாக. ஓ ஜகதீசுவரா! நின் திருநாமப் பிரபாவம் எங்கும் பரவத்தக்கதாக. ஓம் தத் ஸத்.

## எளியவனிடத்தில் அஞ்சி நில்.

எவன் எளியவனோ, பலஹீனனோ அவன் கடவுளின் உண்மைக் குழந்தை. அவனைத் தர்மதேவதை காத்துவருகின்றது. அவன் பொறுமைப்பட்டு நிற்பதை நோக்கி மேன்மேலும் அவனை நசுக்காதே. நீ அவனை நசுக்குவதில் அவன் நசுங்கப்போவதில்லை. அதினின்றும் கடவுள் அவனைத் தப்புவிக்கச் செய்துவிடுவார். ஆனால், அதற்குப் பதிலாக உன்னை நசுக்கித் தொலைப்பது நிச்சயமே. ஆதலின் எளியவனுக்கு அஞ்சி நில். கடவுளின் அனுக்கிரகம் பெற்றோரிற் பல்லோர் எளிய வாழ்க்கையே நடத்தியுள்ளார். ஏழையின் கண்ணீர் வீணாகாது. ஜாக்கிரதை!

யாருக்கும் ஓர் பெரிய நஷ்டமாவது துக்கமாவது வந்துவிட்டால் கொஞ்சநேரத்திற்குள் மனதிலுள்ள கோபம் வருத்தம் இவைகளெல்லாம் போய் வேதாந்தமாகச் சில எண்ணங்கள் உதிப்பது வெகு சகஜம். ஆனால், அந்த எண்ணங்கள் ஸ்திரமாக ஏற்படமாட்டா. சீக்கிரத்தில் மாறிப் பழய எண்ணங்கள் திரும்பித் தங்கள் நஷ்டம், துக்க வேதனைகள் மறுபடி தோன்றிவிடும்.

அமிர்தகுணபோதினி

அங்கீரஸ்ஞு வைகாசிமீ 1-வ

# தொழிலை ஒட்டி அமையும் குணங்கள்.



று மணிக்கே தன் உத்தியோக ஸ்தலத்தில் தயாராக இருக்கவேண்டியவர்கள் அதிகாலையில் எழுந்திருக்கும் குணத்தைப் பெறுகின்றனர். ஒவ்வொருவருக்கும் அவரவர் செய்யும் தொழிலையொட்டி அவரவருடைய குணங்கள் அமைகின்றன. காட்டிலேயே வசித்து ஜீவிப்பவன் நகரவாசியைப்போன்று இருளுக்குப் பயப்படான். துப்பறிந்து குற்றங் கண்டுபிடிக்கும் தொழிலிலுள்ளோர், குற்றங்களைச் செய்யும் கீழ்தரத்தினருடன் பழகவேண்டியும் வரும். அந்தக் கீழ்மக்களை ஏய்த்துத் தங்களின் சூட்சியில் சிக்கவைத்துக் குற்றங்களை வெளிப்படுத்துவது முக்கியமான வேலை. கெட்டிக்காரனைக் கெட்டிக்கரத்தனமான வழியில்தான் பிடிக்கலாம். இவ்வாறாகக் காரியத்தில் வெற்றிகொள்ள எவ்வழியைப் பின்பற்றினும் பாதகமில்லை யென்னும் கொள்கையையே குற்றங் கண்டுபிடிக்குந் தொழிலிலுள்ளோர் பின்பற்ற நேர்கிறது. இந்தத் தொழிலுக்கேற்றபடி அன்னோருடைய ஹிருதயமும் கடினமாகி, அதற்குத் தகுந்தபடி குணங்களும் அமைகின்றன. ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் செய்யும் தொழிலானது அவரவர்களுடைய குணாதிசயங்களை அமைப்பதில் மிகுந்த செல்வாக்குடையதாக இருக்கின்றது.

ஃ

வக்கீல் தொழிலிலுள்ளோர் எந்தச் சிறு விஷயத்தையும் அது இனி வருங்காலத்தில் எந்த முடிவுக்குக் கொண்டுபோய்விடும் என்பதிலும், சிக்கலான ஒரு விஷயத்தை எவ்விதத்தில் சுலபப்படுத்தலாமென்பதிலும் வெகு நுட்பமாக ஆராய்ந்து, சட்டென்று ஒரு யோசனை தோன்றி ஒரு முடிவுக்கு வரும் கூரிய மதியுள்ளோராகின்றனர். வைத்தியத் தொழிலைப் பயின்றோர் பதார்த்தகுண

அதிகமான சந்தோஷமும் விசனமும் ஒருசமயம் மூர்ச்சைபோகும்படிக் கூடச் செய்துவிடுகின்றது. எதுவும் அளவு மீறின் விபரீதமே.

பேதவிவரங்களையும், மூலிகைகளின் நுட்பங்களையும் கண்டுணர்ந்து, இன்னின்ன பிணிகளென்று நிர்ணயித்து அவற்றைப் போக்கும் திறமைகளையும் எய்தப்பெறுகின்றனர். வைத்தியர்களும், வக்கீல்களும் ஒழுக்கந்தவறியவர்களிடத்துங்கூடப் பழகுமாறு நேர்ந்து லௌகிக அநுபவங்களில் தேர்ந்தோராகின்றனர். ஆசிரியத் தொழில்கொண்டோர் உத்தமர்களோடு பழகுவதுடன் மட்டும் நின்றுவிடுவர். பொய் கூறவும், தகாதன செய்யவும் ஆசிரியத் தொழிலில் இடமில்லை. அவர்கள் படிக்கும் புஸ்தகங்கள் சத்தியவந்தர்களைப்போற்றுபவை; நெறிதவறிச் செல்வோரைக் கண்டிப்பவை. தம்மால் உலகத்திற்கு எவ்வளவு தூரம் தம் போதனைகளின் மூலியமாக நன்மை செய்யக்கூடுமோ அவ்வளவுக்கும் இரவும் பகலுமாக உழைப்பவரா யிருப்பர். வலியச்சென்று ஒருவருடன் நேசம் பிடிக்க அவர்களுக்கு நேரமிராது. பெரும்பாலும் ஏகாந்தமாகத் தனித்து யிருக்கவே விரும்புவர். பிறருக்கு நலம் புரிவதற்காகவே உலகில் தாம் வாழ்வதாக எண்ணுவர்.

ஃ

ஒரு வக்கீல்—ஒரு ஆசிரியர்—இவ்விருதரத்தாரும் தத்தம் தொழில்முறையிலிருந்து பெறும் பயிற்சிகளுக்குள்ள நாசுக்கான வித்தியாஸத்தை நாம் சிறிது சிந்திப்போமாகில், வக்கீல் உலகத்தில் பல்வகைப்பட்ட மனிதர்களுடன் சகவாசம் செய்து தேர்ந்த அனுபவஞானமுள்ளவராகவும், ஒரே இடத்தில் உட்கார்ந்தவாறு தமது ஓயாத் தொழிலைச் செய்யும் ஆசிரியர் பெரும்பாலும் நன் மனத்தினர்களோடுமட்டுமே பழகி, அவ்வளவு உலக அனுபவம் போதாதவராகவும், சிலசமயங்களில் புஸ்தகப்பூச்சியாகவும், பிறரது மோச சூழ்ச்சிகட்கு உட்பட்டு ஏமாறிவிடக்கூடியவராகவும் இருக்கலாம். ஆசிரியரின் மனதில் கபடமில்லாது போக, தம்மைப் போலவே உலகமும் வெள்ளை மனமாய்க் கபடமற்றதென்று நம்பி விடுந்தன்மையராகிவிடுகின்றார். வக்கீலோ உலகம் கபடமுடையதென்று முதலிலேயே தீர்மானித்து, அதை அநுபவவாயிலாகத் தெரிந்துகொண்டும் விடுகின்றார். அவரவரது தொழிலுக்கேற்றவாறு குணங்களும் கூடுகின்றன.

ஃ

வர்த்தகத்தொழிலானது பலவித சாக்குகளை நயமான விலைக்குக்கொள்வதிலும், தக்கலாபம் வைத்து விற்பதிலும் போதிய தேர்ச்சியை யுண்டு பண்ணுகின்றது. எவருக்கும் அடிமைப் படாமல்

---

ஒரு வேளைச் சோற்றுக்குக் கதியில்லாவிடினும் பெரிய மனிதத் தடபுடலிலும் வாய் வீச்சிலும் வம்பளப்பிலும் துரோக நினைப்பிலும் குறைவில்லை.

உயர்ந்து, சுதந்திர சுவாதீனர்களாய் வாழுங்குணத்தை விருத்தி செய்கின்றது. செல்வந் திரட்டுதற்கான யோசனைகளை வெகுவாய்ப் பெருக்குகின்றது. வியாபாரத்துறையில் எத்துணையோ மோசங்கள் உள்ளனவாயினும், அவை ஒரு சமர்த்து—வியாபார சாமர்த்தியம்—என்று கௌரவிக்கப்பட்டுவிடுவதில் குணங்கெட்ட நடத்தைகளும் சேர்ந்து கொள்கின்றன. நகை வியாபாரம், இரத்தின வியாபாரம் போன்றவைகளில் உள்ள மோசங்களும், நம்பிக்கைக் குறைவுகளும் உலகப் பிரஸித்தம். ஜவுளிக்கடைப் பொய்க்கு விசேஷித்த பிரபலம் இருப்பது அனைவருக்கும் தெரிந்த உண்மை. ஆரம்ப முதற்கொண்டு இறுதிவரை சந்தேகமே அதிகரிக்கின்ற தொழில் முறைகளு முண்டு. சில வியாபாரிகள் மோசக்காரர்களென்றே தீர்மானிக்கப்பட்டுபோக, அவர்கள் வலியக் கூட்டுறவு செய்யவரினும் உத்தமர்களிற் பலர் அவர்களின் சேர்க்கையை விரும்புவதில்லை. ஒரு வீடு கட்டுதற்குப் பல தொழிலாளிகள் வேண்டியிருப்பதில், அவ்வளவு பேர்களும் வீடு கட்டி முடித்த லொன்றுக்கே வேலை செய்பவர்களா யிருத்தலின், அவர்களின் குணங்கள் ஒருவர்க்கொருவர் உதவியாக நிற்பதாகி ஒன்றுபடப் பொருந்திக் கொள்கின்றன. மாமிஸம் விற்கும் கஷாப்புத் தொழிலைச் செய்வோனுக்கு ஜீவவதை ஒரு பரிதாபமாகத் தோற்றுதுபோக அதற்கேற்ற குணமே படிகின்றது. உபயோகமுள்ள தொழிலாயினும், ஈனத் தொழில்களாக அவை கருதப்பட்டு வழக்கத்திற்கும் வந்திருப்பதில், அவ்விதமான தொழில்களிற் பழகுவோருக்கும், அன்னோரின் ஸந்ததிகட்கும் ஈன குணங்களே சித்திக்கின்றன. இவ்வகையினரில் ஒரு சிலர் மேலான பதவிகளைத் தாங்கிப் பெரிய மனிதர்களாயினும், அதற்கேற்பப் பெருங்குணங்களை ஏற்போர் ஒருவர் இருவரேயாக, மற்றவர்கட்குப் பழய ஈனத்தொழில் வகையிற் படிந்த அற்ப புத்தியும், குறுகிய நோக்கும், இழிந்த சுபாவமும், பொறாமையும் அவர்களை விட்டுத் தொலைவதாயில்லை. சில தொழில்கள் பரம்பரைத்தொழிலாகக் கொள்ளப்பட்டு, அவ்வகையில் குணங்களும் பரம்பரை உணர்ச்சியையொட்டிப் படிந்தனவாகித் தொடர்ந்து தொட்டுக்கொண்டுவிட, பிற்மைநாளில் அவை திருத்தப்படுதற்குக் கூடாமலே போய்விடுகின்றன.

ஃ

சில தொழில்கள் பூர்வத்தில் உயர்நலஞ் சார்ந்தனவாய் விளங்கி யிருப்பினும், பிற்காலத்தில் அத்தொழில்களை யனுஸரித்தோரால் கெட்டுவிடுவனவும் உண்டு. உதாரணமாக, நாடகத் தொழி

---

செய்யும் எதையும் திருத்தமாகவும் ஒரு ஒழுங்குபாடுடனும் செய்யக் கற்றிரு. கபடம் ஒன்றுமில்லை என்கிற இடத்தில்தான் உள்ளேயொன்று மறைந்திருக்கும். இன்றைய ஏமாற்றம் நேற்று நாம் நம்பியவர்களாலேயே.

லைக் குறிப்பிடலாம். ஒருவன் எவ்வளவு உத்தமனாயிருப்பினும், நாடகத்தொழிலிற் புகுவானாகில், ஏற்கெனவே அங்குள்ள கெட்டழிவதற்கான வலைகளுக்குள் அவன் சிக்காமற் போவதில்லை. அங்குள்ளவரின் குணங்கள் தொழில் முறையை யொட்டி அவனுக்கும் படிந்து விடுகின்றன. ஜாதிக்கொரு தொழிலாகப் பூர்வத்தில் செய்து வந்ததில், அந்தந்த ஜாதியினுடையவும், அதனதன் தொழில் முறையினுடையவும் தன்மைக்கேற்பக் குணங்கள் கூடிக்கொள்கின்றன. புரோகிதத்தொழிலை மேற்கொண்டவர்களும், கோவிலில் அர்ச்சகர்களும் குருக்களுமாக இருப்பவர்களும் யாசகத்தொழிலை ஈனமென்று நினையாத குணத்திற் சேர்கின்றனர். ராணுவத்தில் பழகுகின்றவனுக்குப் போர்க்குணங்கள் பொருந்துகின்றன. தன் காரியத்திலேயே திருஷ்டியா யுள்ளவனுக்குச் சுயநல குணங்கள் உற்பவிக்கின்றன. ஒரு விவசாயிக்குப் பயிர்த்தொழிலைப்பற்றிய குணங்கள் அமைகின்றன. நன்கு கற்றவனுக்கும் கல்லாதோனுக்கும் ஏற்படுகிற குணங்கள் வெவ்வேறு; அவரவர்கள் புகும் தொழில் முறைகளும் வெவ்வேறு. குமாஸ்தா முதலிய தொழில்களில் அமர்வோர் தமக்கு மேலுள்ளோரின் குணங்களைப் பின்பற்றுகின்றனர். அவ்விதம் மேலுள்ளோர் மோசக்காரர்களாயும், நாணயந் தவறியவர்களாயும் கபடஸ்தர்களாயு மிருப்பின் இவர்களுக்கும் அதே குணங்கள் கூடுகின்றன. தர்மகுண சீலர்களின் கீழ் தொழில் பயின்றோர் தயாளசிந்தையும் தர்ம புத்தியும் கூடியவராகின்றனர். ஒரு தாசியின் வீட்டில் தொழில் புரிவோருக்குப் பிறரை அவள் வலையில் வீழ்த்திக் கிடைத்தவரையில் தட்டிப்பறிக்கும் குணங்கள் பொருந்துகின்றன. கணவன் எவ்விதமோ அதற்கேற்ப அதே குணங்கள் மனைவிக்கும் ஏற்படுகின்றன. பிதாவின் குணங்கள் புத்திரர்களுக்கும் தொடர்கின்றன. மேலுக்கு எழுஞ் சிந்தனையின்றி அடிமை எண்ணங்களையே கொள்ளும் பெண்களின் எண்ணிக்கையே அதிகம். அவ்வாறான பெண்களின் கீழ் பயின்றோர்க்குத் தாங்கள் கடைகெட்ட ஜீவன்களென்றும், ஆடவர்க்கு அடிமைப்பட்டுக் கிடக்கவே தோன்றியவர்களென்றும், பிரஜோற்பத்தி ஒன்றிற்காகவே தாங்கள் படைக்கப்பட்டவர்களென்பதுமாகிய இழிந்த குணங்கள் கூடிக்கொள்கின்றன. ஒரு கள்வர்கூட்டத்தைச் சேர்ந்தோனுக்குப் பிறர் பொருள் அபகரித்தல் அடாது என்ற புத்தி தோன்றுமோ? ஒரு மடாதிபதியின் கீழ் பணி புரிவோனுக்குப் பக்தி ஞான வைராக்கியங்கள் சித்தித்தல் கஷ்டமோ? எச்சில்செய்வதை அசங்கதமாக எண்ணாது சாதாரணமாகக்கொண்டவர்கள், தாங்கள் கைத்துண்டில் முடிந்துள்ள முடிச்சைப் பறக

---

ஏமாற்றியவர்களை ஏமாற்றத் தெய்வங் காத்திருக்கிறது. ஏமாற்றிப் பிழைக்கும் வாழ்வு அடியோடு நாசமாகிவிடும்.

ளாற் கடித்து அவிழ்க்கப் புகுதலும் ஒரு அதிசயமாமோ? அவ்விதம் செய்வது எச்சில் என்று அன்னோர் எண்ணுவதும் ஏது?

ஃ

மிருகங்களைக்கொன்று தின்று ஜீவிக்கும் ஒரு வனவேடனுக்கு என்ன குணங்கள் படியலாம்? மிகுந்த பிரக்யாதியையும் கௌரவங்களையும் பெற விரும்புவோருக்கு டம்பமான குணங்கள் அமைகின்றன. எவ்வளவு கடன்க ளிருப்பினும், எத்தனைச் செலவுகள் ஏற்படினும் புதிய கௌரவம் காண்டலொன்றையே நோக்காகக் கொண்டு அலைவர். ஒரு பத்திராசிரியருக்கு உலகைச் சீர்திருத்த நினைப்பதும், தாம் பட்டினி கிடந்தேனும் பத்திரிகையை நடத்த வேண்டுமென்பதுமான குணங்கள் தோன்றுகின்றன. சோம்பிக் கிடப்பவனுக்கு அதற்கேற்ற குணங்கள் பொருந்துகின்றன. விபசார சிந்தகர்கள் தங்களின் எண்ணங்களுக்கேற்ற குணங்களை யடைகிறார்கள். குழந்தைகள் அவர்களின் வயதுக்கேற்ற குணங்களைக் கொள்கின்றன. இவ்விதமே, நவயௌவனமானது தனது துடிப்பிற்கேற்ற கண்நோக்குகளை வளர்க்கின்றது. பக்தி மார்க்கத்திற் கருத்துள்ளோருக்கு ஆசாரம், சுசீலம், விரத நியமனங்கள், ஆலயம் செல்லுதல் ஆகிய நற்குணங்கள் அமைகின்றன. தொழில் முறையில் யோக்கியதை—அயோக்கியதையென இருவகையுண்டு. எங்கெந்த வழியில் சித்தம் பாய்கின்றதோ அதற்குத்தகுந்த குணங்களை யடைகின்றார்கள். கஞ்சா—அபின் கடைகளைக் குத்தகைக்கு எடுத்து வியாபாரம் செய்தும், மதுபானக் கடைகளை நடத்தியுமுள்ளவர்களிற் சிலர் அத்தீயனவற்றில் சம்பந்தப் படாமல் நற்பழக்கத்திற்கான குணங்கள் பொருந்தி யிருந்ததையும் பார்க்கிறோம். அவரவர் அநுஷ்டிக்கும் தொழில் முறைகளுக்கேற்பக் குணங்கள் கூடுவது அதிகமேயாயினும், எத்தொழிலைச் செய்தாலும், எவ்விதம் நடந்தாலும் சத்திய மார்க்கத்தையே பின்பற்றித் தர்ம வழியில் நடப்போராகவுமுள்ள சிலரை அபூர்வமாய்க் காண்கின்றோம். எவ்வளவோ வேதாந்த ஞான நூல்களை வாசித்திருந்தும் இழிகுணங்களையே கொண்டிருப்போரும் உண்டு. கல்வியில் மிக்க மேதாவிகளாயிருப்போரிற் சிலர் காமவிகாரத்துடன் அலைந்த காட்சிகளுமில்லாமலில்லை. எனவே, குணங்கள் பொருந்துவதைப் பிறவியில் அமைந்தனவாகவும், சகவாசதோஷங்களால் ஏற்படுவனவாகவும், தொழில் முறையின் வழியே பயின்றிடும் தன்மையனவாகவும்—ஆக மூன்று விதங்களாக பிரித்துச் சொல்லுதல் கூடும். எத்தொழிலிற் பழகிடி

---

தெய்வச்செயலாய் ஏதாவதொரு பிடிப்பு, தான் தவறி விழுகிற ஒவ்வொரு அபாயகாலத்திலும் ஊன்றுகோலாய்க் கிடைத்து உயிரைக் காப்பதும் உண்டு.

லும் நற்குணங்களே பொருந்துமாறு தங்களைத் திருத்திக்கொள் வதே மேன்மை. ஃ

எத்தொழிலிலும் அன்புமுகம் சிலாக்கியமானது. பிறர் அன்புடையவராக இருப்பதற்கு—முதலில் நீ அன்புடையவனாக ஆகுக. தொழிலின்மூலம் பலர் நட்பினராதலுமுண்டு. உன் நேசத்தின் உறுதிக்கேற்பப் பிறரும் இருப்பர். எத்தொழிலிலும் பரிசுத்தமான மனம் வேண்டும். தூய்மையான உள்ளத்தில்தான் உண்மையான ஸந்தோஷமும் தர்மகுணமும் விருத்தியாகும். கபட மனம் பாவத்தால் வருந்துவதன்றி மகிழ்வு காணாது. தொழிலில் அதர்மமாய் வஞ்ச மனத்துடன் சேகரித்த திரவியம் அடுத்த சந்ததிக்கு நிற்பதில்லை யென்பது பலர் கண்ட அனுபவம். தொழில் வகையில் கர்வமென்பது உன் மனதில் தோன்றவே கூடாது. உன் தொழிலை நடத்துகையில் பிறருக்குக் கெடுதிசெய்யும் ஒரு வார்த்தையையும் நீ சொல்லாதே. சொல்லவும் நினைக்காதே. அசுத்தமான எண்ணத்தின் நிழலிலிருந்து நீ எதுவரையிலும் விலகுகின்றனையோ அவ்வளவுக்கும் உன் தொழில்முறையைக் கடவுள் ஆசீர்வதிப்பார். உன் தொழில்முறையில் நீ எப்படி ஆகிறாயோ—உலகும் உனக்கு அப்படியே ஆகும்; பிற்கால பலனும் அதற்குத் தக்கபடியே இருக்கும். திடமனதுண்டாகில் கொலைஞனும் திருந்தி நற்குணங்களைக் கொள்ளலாம். வருந்தினால் வராததொன்றில்லை.

### தூண்டிவிட்ட சுப்பன்!

கலகமிட்டுக்கொண்ட இருவரும் பிறகு சமாதானமாய்விடுவதில், அவர்களிலே ஒருபக்கத்தில் நின்று தூண்டிவிட்ட சுப்பனுக்கு அந்த வேலை போய்விடுகிறது. இருவரும் இப்பொழுது வெகு உறவாய்க் குலாவிக்கொள்ளுகிறார்கள். தூண்டிவிட்டவனே இப்போது இருவருக்கும் அன்னியனாகிவிடுகிறான். கடைசியில் தூண்டிவிட்டவன் வாரிக்கொண்டது ஏதுமில்லை. அனாவசியமாய்ப் பிறரது சங்கதியில் நுழைந்துகொள்வார் கடைசியில் இருபக்கத்திற்கும் விரோதிகளாவதைத் தவிர வேறு நலம் காண்கின்றார்களில்லை. அத்துடன் நாணித் தலைகுனியவும் வருகிறது.

*சில சமயங்களில் தாமதமாய் வேலைசெய்து ஜெயமடைய சாவகாசமிருப்பதில்லை. சீக்கிரமாகச் செய்யவும் வசதியோ மனிதர்களோ கிடைப்பதில்லை. பெரிய வேதனை இது.*




## பார்த்த ருசி சேர்த்தவொரு பைந்தேன் கூடு.

---

*காதலின் சிறப்பு* :—

காதல் கதுவங் காலை
யோதுவை நீயே யுறுமதன் சுவையே.

(கதுவுதல்=அதிகமாகப் பற்றல், கலந்ததல், நீங்காது பற்றல், பற்றுதல்.)

*குற்றம் காண்பதின் முடிவு* :—

குற்றங் காணக் குறுகுதன் முற்றும்
மணற் சோற்றின் கற் றேடுதன் மானும்.

(குறுகுதல்=கிட்டுதல். மானும்=ஒக்கும், சமானமாகும், ஒப்பாகும்.)

*ஒருவனின் துயரம்* :—

நரைத்த தேன் சிரம் ; திரைத்த தேன்னுடல் ;
தள ளருங் காலம் ; பிள்ளையும் வேறிலை.

(திரைதல்=சுருங்குதல்.)

*அன்பின் கூற்று* :—

கனியென வுனையான் கண்ட நாடோட்டு,
நின் முக நோக்கியு நின் சொற் கேட்டு
மேன் மிகை நீக்கி யின்ப மெய்தி,
யுன் மன மகிழ்ச்சிக் குதவுவ வுஞற்ற
வுயிர் தரித்திருந்தேன்.......................

(மிகை=துன்பம், வருத்தம். உஞற்றல்=செய்தல், முயற்சி பண்ணுதல்.)

*விவாகத்தைப் பற்றி* :—

நேசமில் வதுவை
நாச காரணமே.

*மாதரார் கடமை* :—

தையலார் மையலாய் நேயம் பூண்டு
வாழ்வது கடமை.

*நேசத்தின் லக்ஷணம்* :—

இரும்பும் காந்தமும் பொருந்துந் தன்மைபோல்
இருவர் சிந்தையு மியல்பா யுருகி
யோன்றுந் தன்மை.....................

---

*தன்னை அன்புடன் வரவேற்காத கண்கள் எந்த முகத்தில் இருக்கிற தென்பதை எந்த மூடனும் சுலபமாய் அப்பொழுதே அறிய முடிகிறது.*

*நங்கையர் காதல் வழி :—*

ஆடவர் காத லறைதலுந், தையலர்
கூடமாய்க் கொள்ளலு மியல்பே போலும்.

(கூடம்=இரகசியம்.)

*பெண்களின் மனம் :—*

ஏந்திழையார் சொல் நீர் மே லெழுத்தாம்
யாவரறிவா ருளீம் ?

*நல்லோர் துணை :—*

துதி பெறு மன்பு நற்குணமு முளா
ரிற் றுணைவராயி னில்லதென் னுலகில் ?

*விதி விதி என்பதின் இழிவு :—*

....................விதியெனப் பலவும்
படியோர் பாவனை பண்ணித் தமது
கடமையின் விலகுதன் மடமை..............

*இல்லறத்தின் உயர்வு :—*

போனகந் துறந்து கானகம் புகுந்து
தீயிடை நின்று சாவடைகின்றர் ;
தந்தை தா யாதியா வந்த தன் குடும்ப
பந்த பாரத்தினைப் பேணித் தனது
சொந்தமா மிச்சைக டுறந்து மற்றவர்க்
கேந்த நாளுஞ் சுக மியைந்திடக் கடமையின்
முந்துகின்றவரே முதற்றவ முனிவர்.

(மனோன்மணீயம்.)

## முனிசிபல் எலெக்ஷன்களின் பெருமை.

1. கள்ளுக்கடைகளுக்கு வரும்படியும், கட்குடியர்களுக்குப் பெரும்பிடியும், காபிக்கடைகட்கு லாபமும்.

2. ஓட்டர்களின் பணப்பை நிறைதலும், எலெக்ஷனுக்கு நிற்போரின் பணப்பை காலியாகிச் சோர்வதும்.

3. முனிசிபல் சிப்பந்திகளின் ஆரவாரமும், சேர்மன் முதலியோரின் அதிகார உக்கிரகமும்.

4. நெஞ்சழுத்தக்காரனுக்கு நல்லகாலம்; அவன் பக்கமே வெற்றி. பயந்தவனுக்குக் கஷ்டகாலம்.

5. ஊருடன் பகைத்தான், வேருடன் கெட்டான்.

# நிபுணத்துவமும் நற்குணமும்.



ஒரு வாலிபனை நிபுணனென்று மாத்திரம் சொல்லக்கேட்க எனக்கு விருப்பமில்லை. அவனிடத்தில் சாமர்த்தியந் தவிரப் புகழத்தக்க பெருமை வேறொன்றும் இல்லாதிருக்குமாயின், இவன் கரணம் போடுவதில் கைதேர்ந்தவனென்று சொன்னால் எவ்வளவு பெருமை தோன்றுமோ அதைப் பார்க்கிலும் அவனிடத்தில் வேறெந்த விசேஷமும் புலப்படாது.

ஃ

மிக்க விசித்திரமான சரக்குகள் அமைந்த கப்பலின் அகன்ற பாய்கள் பார்வைக்கு விநோதமாயிருக்குமாயினும், அக்கப்பலுக்கு ஏற்ற அடிப்பாரமில்லாதிருப்பின், அந்தப் பாய்களும் அதன் அழகும் யாவும் அதன் அழிவுக்கே ஏதுவாம். இவ்வண்ணமே ஒரு சிறுவனுடைய சாமர்த்தியம் பார்ப்போரை வியக்கச் செய்வதாயினும், அவனுடைய யுக்தி யாலோசனைகளை நல்வழியில் செலுத்தத் தக்க நீதி நன்னெறிகள் இல்லாவிடின், அந்தச் சாமர்த்தியமத்தனையும் பாவத்தொழில் புரிந்து துன்பப் படுவதற்கே காரணமாகும்.

ஃ

நிபுணரான மனிதர்கள் அனைவருமே மிக்க உபயோகமானவர்களாயிருந்தனரென்பதில்லையே. எத்தனை மனிதர்கள் நிபுணர்களாயிருந்தும் கெடுவழி சென்று பிறர்க்குத் தீங்கு செய்வதிலேயே நோக்கமுள்ளவர்களா யிருக்கின்றனர்? உண்ட வீட்டுக்கே துரோகம் செய்யும் நன்றி கெட்டவர்கள் எத்தனை பேர்? தங்களின் நிபுணத்துவத்தைக் காண்பித்துத் தப்புக் கணக்குகள் எழுதிப் பெருந்தொகை அபகரித்தோரும் பலரே. பெரிய வியாபார ஸ்தலங்களின் நிர்வாகம் எவ்வளவு நிபுணத்துவமாய் நடந்தபோதினும் நாணயமும் சத்தியமுமில்லாவிடிற் பயனென்ன? பலரும் அவ்வித வர்த்தக ஸ்தலங்களை நம்பி மோசம்போகவே நேருகின்றது. கற்றறிந்தோரிற் பலர் உத்தம குணத்தவர்களாயில்லை. சிலரே நற்குணம் கொண்டு விளங்குகின்றனர். இவ்வாறாயின், இவர்கள் கற்ற கல்வியாற் பயனென்ன? கற்றதற்கு நற்குணமன்றோ பிரதானம்? அது இல்லாது வெறும் நிபுணத்துவமட்டுமே இருப்பது கேட்டிற்கே வழி. இவ்விதமே நிபுணரான சிறுவர்கள் எல்லா மேன்மையும் பெற்றிடுவார்களென்று நம்புவதற்கில்லை. அத்துடன் நீதி, நற்குணம் சிறிதளவேனும் இருக்குமாயின், அதுவே என்றைக்கும் அளவற்ற சாமர்த்தியத்திற்குச் சமமாகும்.

ஃ

திறமையுள்ள சிறுவனொருவனை என்னிடம் அழைத்துவந்தால் அவனைப்பற்றி நான் சில கேள்விகளைக் கேட்பேன். அவையாவன:—(1) அவன் தெய்வத்துக்கு அஞ்சினவனா? (2) மாதா பிதாக்களிடத்தில் மரி

---

குற்றம் செய்த குற்றவாளி கஷ்டப்படுவதைவிட நிரபராதியான ஒருவன் குற்றவாளியாக்கப்படும்போது அடைகிற கஷ்டமே அதிகமும் கனமுமானது.

யாதையுடையவனா? (3) உபாத்தியாயர்களுக்கு அடங்கினவனா? (4) வேதத்தை நம்புகிறவனா? (5) உண்மைபேசுகிறவனா? (6) நெறிதவறாமல் நடப்பவனா? (7) பூததயை பச்சாத்தாபமுடையவனா?— என்பவையாம். இந்த நன்னடக்கைகளெல்லாம் அவனிடத்தில் அமைந்திருக்குமாயின், அப்போது அவனுடைய திறமைகள் கொண்டாடத்தக்கவையாம். இவையொன்றும் இல்லாவிடின் அந்தத் திறமை இருந்தும் இல்லாதது போன்றதே.

ஃ

விசேஷமான திறமையில்லாதவனாயினும், நல்ல நீதி நியாயங்களும், சொன்னதைக்கேட்டு நடக்கும் குணமும், பொறுமை உழைப்பு விடா முயற்சிகளும் உள்ளவனாய் ஒருவனிருப்பானாகில்—இந் நற்செயல்களொன்றுமில்லாமல் சாமர்த்தியம் மாத்திரம் மிகுதியாகப் பெற்ற சிறுவனுக்கு அவன் எவ்வகையிலும் குறைந்தவனல்லவென்று நான் உறுதியாய்ச் சொல்வேன்.

ஃ

இதனால் சாமர்த்தியத்தின் சிறப்பை நான் இகழ்வதாய் எண்ண வேண்டாம். நன்மை பயக்காத சாமர்த்தியம் உபயோகமற்றதென்றேனே யொழிய வேறில்லை. கூடுமானால் எல்லாச் சிறுவர் சிறுமிகளையும் நிபுணர்களாகச் செய்வது எனக்கு இஷ்டமே. "நான் நிற்கும் நிலைமை உயர்ந்த பதவியே யாகட்டும்; தாழ்ந்த பதவியே யாகட்டும்; அந்தந்தப் பதவிக்கேற்றபடி எனது செய்கடன்களைச் சன்மார்க்கம் தழுவிக் கடவுளுடைய கிருபையினால் திறமையாகவே தீர்த்துவருவேன்" என்று ஒவ்வொருவனும் சங்கற்பித்துக்கொள்ளக்கடவன். நிபுணத்துவமும் நற்குணமும் ஒன்றைவிட்டொன்று பிரியாமல் எப்போதும் கூடியே இருக்க முயல்வோமாயின், நாம் கடவுளுக்குப் பிரியமானவர்களாவோம்.

ஃ

நமது நிபுணத்துவத்தை ஒரு நல்ல காரியம் செய்வதிலோ, ஒரு குடும்பத்துக்கு நேர்ந்த ஆபத்தை நீக்குவதிலோ, விவாகம்போன்ற சுப காரியத்தை நிறைவேற்றுவதிலோ அநாதையான ஒருவனுக்கு உற்ற துணையாயிருந்து அவனைத் தைரியப்படுத்துவதிலோ, இதுபோன்றவற்றில் காண்பித்து நாம் திறமையுள்ளவர்களாகக் கடவோம். எக்காலத்தும் நாம் பரிசுத்தமனமும் நற்குணமும் கொண்டிருக்கப் பயின்றுவிடுவோமானால், நம்முடைய ஜீவியலாபத்தைப் பற்றி நமக்கு எவ்வித கவலையும் வைக்காமல் எல்லாக் கவலைகளையும் கடவுளே ஏற்றுக்கொண்டு நடத்திச் சென்று நம்மை வாழ்த்துவிப்பாரென்பது திண்ணம். இது அனுபவமாய்க் கண்டறிந்த உண்மை.



---

சிலர் ரூபாய்க்குப் பாக்கிச் சில்லரையைக் கொடுக்காமல் ஜாடையாக இருந்துவிட, கடையில் சாமான்கள் வாங்கியவன் சில்லரை கேட்க மறந்து போய் பிறகு திரும்பி வந்து கேட்கும்பொழுது, கடைக்காரன்— "அப்பொழுதே கொடுத்து விட்டேனே" என்கிறான். ஒரு அணாவுக்குப் பதிலாக அதே அளவிலுள்ள கால் ரூபாயையும், காலணாவுக்குப் பதிலாக அரை ரூபாயையும் கொடுத்துவிட்டு ஏமாறுவோரும் உண்டு. உலகில் பெரும்பாலும் பிறரை ஏமாற்றுதலான சங்கதிதான் அதிகம். ஆதலின், எப்பொழுதும் எதிலும் விழிப்பாயிருக்க வேண்டியது அவசியமாகிறது.

# விபசாரத்தின் பயங்கரம்.

60-ம் பக்கத் தொடர்ச்சி.)

"நேற்று முழுதும் நீங்கள் இந்தப் பக்கம் வரவேயில்லையே! உங்களை என் கண்கள் தேடி வாடினவே! ஏனோ வரவில்லை? வேறு எவளையாவது தேடிச் சென்றீர்களோ? உங்களிடத்து நான் கொண்டுள்ள அன்பின் ஆழத்தினை நீங்கள் நன்கு உணர்ந்திருந்தால் இப்படி வராது போவீர்களா? எவ்விதமோ என்னை மயக்கி உங்கள் வசப்படுத்திக் கொண்டீர்கள்! உங்களோடு மனது ஒன்றுகி ஐக்கியப்பட்டுவிட்ட நான் உங்களைப் பிரிதல் என்ருல் என் ஆவி தவித்துப் போகின்றது! அரைக் கணமேனும் உங்களைவிட்டுத் தனித்திருக்க எனக்கு சக்தியில்லையே! என்னை இங்ஙனம் சோதித்தல் நீதியோ! முறையோ! தர்மந்தானோ! என்ஜீவாதாரமே! உங்களையே நம்பியுள்ள இத் தோகை மயிலுக்குக் கழுத்தில் ஒரு கடியாரச் சங்கிலியை அணிவித்தால் எத்துணைப் பரம சுந்தரமாயிருக்கும்? அதை நான் முந்தா நாள் கேட்டேனென்று தானே நீங்கள் நேற்று முழுதும் வராமற் போனீர்கள்! உங்களுக்குப் பிறகு உங்களின் ஆஸ்திகளை யெல்லாம் வாரிக்கொண்டு தன் தாய் வீட்டிற்கு ஓடி விடப் போகும் உங்கள் மனைவிக்கென்ருல் எவ்வளவாயினும் செய்துபோட உங்களுக்கு மனம் வரும். அவளும் அவள் தாய் வீட்டினரும் எவ்வளவுக்குத் தின்று அழித்தாலும் அது உங்களுக்கு சம்மதமாயிருக்கும். எனக்கென்று நான் ஒன்றுகேட்டால் அதற்குத்தான் கை சுருங்கிப்போய் விடும். இந்த வீட்டின் பக்கம் வராமலே ஒளிந்து கொண்டுவிடவும் வைக்கும்! நான் என்ன சொந்த ஸ்திரீயா? அன்னியப் பெண்தானே! அவ்விதம் அன்னிய ஸ்திரீபோல் என்னை நினைத்ததால் தானே நேற்று நீங்கள் வரவில்லை. கேவலம் ஒரு நானூறு ரூபாயுள்ள ஒரு கெடியார கொலுசு செய்து போடவும் மனமில்லாமற் போனதற்கு என்னை அன்னிய மாதாக நினைத்ததல்லவோ காரணம்? நானென்னவோ உங்களை என் சொந்த சொத்தாக—என் ஆவிக்கு அமிர்தமாக--என் ஜீவாதாரமாக—பிரியாத்துணையாக—பேரின்பப் பொக்கிஷமாக—என் மதன தாகத்தைத் தீர்க்கும் மன்மதனாக—நினைத்திருக்கிறேன். நீங்களோ என்னைப் பேதமாக—தூரமாக—எண்ணுகிறீர்கள்; வேற்று நங்கையாகக் கருதுகின்றீர்கள். உங்களின் உடல் பொருள் ஆவியினை உங்கள் மனைவியிடமே வைத்துவிட்டு வெற்றுடலேகொண்டு ஒப்புக்கு இங்கு வந்து ஒய்யாரச் சல்லாபம் செய்கின்றீர்கள். என் கண்மணியே! நாதா! இது உமக்குத் தகுமோ? நேற்று முழுதும் நீங்கள் வராது போனதின் காரணமென்ன? அதை உண்மையாகச் சொன்னல் தான் என் புண்ணுன மனம் ஆறும்"—என்று பேசி மயக்கும் விலைமடந்தையரின் மாய மொழிகளிற் சிக்கிக்

---

அவர்களின் பிணி, நஷ்டம், பாடு இவைகளில் இவர்களுக்குச் சிரத்தையில்லை. இவர்கள் எக்கேடு கெடினும் அவர்களுக்குச் சிரத்தையில்லை. ஆனல், மேலுக்கு உறவாடுவதிலும் க்ஷேமம் கேட்பதிலும் குறைவில்லை.

கெடும் ஆடவர் இறுதியில் என்ன காண்கின்றீர்? தீராப் பிணியும் பிரலாபிப்புமே கடைசியிற் பெறும் பெரிய சொத்து! அவற்றினுள் முன்பு அரையாப்புக் கட்டிகள் வரையிற் சொல்லித் தொலைத்தோம். இனி மற்றொரு பயங்கர நோயையும் இங்கு கூறி அழுது தீர்க்கின்றோம்.

ஃ

கேட்கிறீர்களா! கேளுங்கள்! கிரந்திப்புண் அல்லது சிலந்தி என்பது மிகவும் கோரமான வியாதி. இது பாடையேற வைக்குமே யன்றி குணப்படுவது கனவிற் கண்ட வார்த்தை. குணப்பட்டது போலக் காணினும், வயது முதிர்ந்து தேகம் கொஞ்சம் துர்ப்பல நிலைமைக்கு வரும் பொழுதும், இதர பிணிகளேதேனும் ஸம்பவித்த பொழுதும்—திரும்பவும் வந்து அது தலைக்காட்டும். இப்பிணியுள்ளோருக்கு உதிக்கும் மக்களுக்குக் கூட அப்பன் சொத்துபோல் வந்து பற்றிக்கொள்ளும். அன்னிய ஸ்திரீயின் சேர்க்கையின்பம் முடிந்த பின்னர் 2-3-தினங்கள் முதல் 20—தினங்களுக்குள்ளே மர்மாவயவத்தின் மீது ஒரு சிறுப் பருப்போன்ற கெட்டியான கட்டி புறப்பட்டு வாயுடைந்து சீழுடன் நிறைந்து, பிறகு ஆறிச் சாதாரணமாய்த் தனக்குத்தானே நீங்கிப்போய் விடும். ஒருக்கால் வீக்கம் காணுமே யாகிலும், அது அரையாப்பாய்ப் பரிணமிக்காமல் சில தினங்களுக்குள்ளேயே அடங்கிப்போய் விடும். இரண்டு மூன்று நான்கு மாதங்கள் கழிந்த பின்னர் சரீரத்தில் அங்கங்கு புண்கட்டிகள் போன்ற பிளவைகள் புறப்பட்டு உடைந்து சீயொழுகிப் பிறகு உலர்ந்து காவி வர்ணமுடைய தழும்புகள் ஏற்படும். வாய்க்குள்ளும், அண்ணத்திலும், கழுத்தினுள்ளும், மூக்குமேலும், சீழுடன் கூடிய அண்டைகளும் காணப்படும். உள்ளங்கை, உள்ளங்கால் முதலிய இடங்களிலும் சீழ்ப்புண்கள் உண்டாகும். சிலருக்கு இதழ்கள் இதழ்களாய்க் கருப்பான இரணங்கள் கிளம்பிப் படர்ந்துகொண்டு போகும். ஒன்றிரண்டு வருடங்கள் கழிந்த பின்னர் வியாதி தோன்றிய நாற்பது வருடங்களுக்குள்ளாக இன்னும் மகா கோரமான கஷ்டங்கள் பிராப்தியாகும். மூக்கு, அண்ணம், தாடைகள் கபாலம்—முதலிய இடங்களில் எலும்புகள் கிரம கிரமமாய்த் தின்று போடப்பட்டுத் தொளைகளும் மூளிகளும் விகிருத வடிவங்களும் சித்திக்கும். ஒரு பொழுது தொண்டையில் புண் கிளம்பும். அண்ணத்துக்கும் மூக்குக்கும் வழி யுண்டாகி விடும். எலும்புகள் சிறு சிறு பின்னங்களாய்த் துண்டுகளாய்ப் பொடிப் பொடியாக உதிர்ந்து கொண்டே வரும். விரல் நுனிகள் அழுகிக் கொண்டுவரும். ஐயோ! சிவ சிவா! சொல்வதற்குக்கூட மிகவும் கஷ்டமாயிருக்கிறது. இந்த வியாதி நமக்கே படுகுழி வெட்டுகிற நமது தீராவைரிகளுக்குக்கூட வாராதிருக்குமாக!

ஃ

கிரந்திப்புண் தோன்றிய உடனேயே அக்கிரந்தியை மெல்லென அறுத்துப் போடவேண்டும். அல்லது, மருந்துக் கட்டியுடனாவது, ஆமில திராவகத்துடனாவது சூழவும் சுட்டுக் கருகச் செய்யவேண்டும். பிற்பாடு முன்சொன்ன துருவடிப் புண்ணுக்குப் போலவே சிகிச்சை செய்யவேண்டும். நிலக்கரியைப் பொடியாக்கி "கந்த காமலத்" (ஸல்பியூரிக்

---

கடவுளுடைய கருத்து, அதாவது அவருடைய அருளுக்குப் பாத்திரமான என்னுடைய கருத்து நிறைவேறியே தீரும்.

ஜூஸ்ட்) துடன் கலந்தரைத்துப் புண் மேல் தடவிக் கொஞ்சநேரம் வைப் பதினுற் கூடச் சீக்கிரமாய்க் குணப் படும். இப்படிக் கஷ்டப்பட்டுக் குணப்படுத்திக் கொண்டபோதிலும், பிற்பாடுங்கூடத் தேமல் கடி முதலி யவை யுண்டாகலாம். இந்தக் கொடுந் துயரம் ஸம்பவிக்கும் பொழுது முத லில் ரண சிகிச்சைக்கு ஆங்கில வைத் தியம் தேடிக்கொண்டு, பிறகு நோய் தீருவதற்காகத் தக்க ஆயுர்வேத வைத் திய பண்டிதரைக்கொண்டு கனத்த பத்தியங்கள் இருந்து ஔஷதங்கள் அருந்தி சிகிச்சை செய்வித்துக் கொள்ளவேண்டும். தேகத்தில் ஊறிப்போகாதிருக்கப் பார்ப்பதே முக்கிய சிகிச்சையாகும். முற்றும் குணப்படுத்துதல் என்பது இல்லை யாயினும், நூற்றுக்கு முப்பது பங்கா வது குணப்படலாம்.

ஃ

ஒவ்வோர் வேளை, துருவடிப்புண் மூத்திரக்காலில் உண்டாகும். ஒரு வேளை துருவடிப் புண்ணும் பிளவை யும் கலந்து காணும். மற்றோர் வேளை கிரந்திப் புண்ணும் வெட்டைநோயும் சேர்ந்து தோன்றும். அப்படிப்பட்ட தருணங்களில் உண்டாகும் வேதனை யும் குத்தலும் இவ்வள வவ்வள வென்று சொல்லத் தாமல்ல. ஒரு மாதம் வரைக்கும் ஓயா மழையும் குளிருமாக ஊர் முழுதும் குளிர்ந்து ஜில்லென்று இருந்தாலுங்கூட இந்த நோய்களுள்ளோரின் தேகம் கன வெப்பமாய் நீர்விடும்போது அக்கினி மயமாகவே இருந்து லபோ லபோ என்று அலறவைக்கும். அரை நாழி கைப்போகம்–ஆறுமாத ரோகம் என்று சொல்வார்களாயினும், பிறகு அது தேகத்தில் ஊறிப்போய் எந்த வைத்தியருக்கும் மருந்துக்கும் நிவர்த்தி படாமலேபோய் ஆயுஷ்கால மெல்லாம் ரோக மென்றால் சரிப்பட் டுப் பொருந்தும்படியாக ஆகிவிடும். எனவே, இப்பொல்லாப் பிணிகளின் வாயிற்படாம லிருப்பதற்கு ஓரே உபாயமுளது. அதாவது, கெட்ட நடவடிக்கைகளை யொழிக்கவேண்டி யதே. கெடு நடக்கையில் அடிபட்டுச் சஞ்சரிப்போரது பாடுகளைக்கண்டு நற் புத்தி பெற்றிருக்கவேண்டும். விப சாரத்தைக் கனவிலும் கருத வொண் ணுது. இச்சொற்களை மனத்தினில் மறவாதிட்டுக் கொள்ளவேண்டும்.

## நடுவில் நுழைந்து கெடுத்தல்.

தான் அவர்கள் பக்கம் பேசியதாய் இருக்கவேண்டு மென்று சிலர் ஒரு சங்கதியில் அனுவசியமான குறைகளைப் பேசி அது பொத்தல், இது கந்தை என்று பழித்துக் காட் டத் தொடங்குகிறுர்கள். இதைக் கேட்பவர்களும் தங்கள் பக்கமாக அவர்கள் சேர்ந்து பேசுகிறுர்களென்றெண்ணிப் பெருமைப்பட்டுக்கொண்டு, "அவர் அப்படிச் சொல்லும் போது நான் எப்படிச் செய்கிறது" என்று பின்னுக்கு இழுக்கிறுர்கள். இதைக் கண்ட எதிர்மனிதன் நம் காரியத் திற்கு இவன் எங்கே சனியனுக வந்து முளைத்தான் என்று நெஞ்சம் புண்ணுகிறுன். கடைசியில் ஆகவேண்டிய முக் யெமான காரியத்தைப் பாழ்படுத்துவதே இந்த நடுவில் வந்து பேசுவோர் செய்யும் வேலையாக இருக்கிறது.

# இறைவனுடைய மாயம்.



நாமெல்லோரும் பரமார்த்தனுடையகிருபையால் இப்பூவுலகின்கண் பிறந்திருக்கின்றோம். அந்த சர்வக்ஞனுடைய திருவிளையாடல்களை நாம் சற்று ஆராய்வோமாயின் நமக்கு அவைகள் முதல் தோற்றத்தில் ஆச்சரியமாகவும் விகல்பமாகவும் ஒன்றுக்கொன்று முரண்படுவதாயும் தோன்றும். ஆனால், சரிவரக் கூர்ந்து நோக்கின், எல்லாம் அறிந்த இறைவன் அவரவர்களுக்கு எவ்வெவ்வாறு இருத்தல் வேண்டுமோ அவ்வாறே அமைத்திருக்கிறார் என்பது தெரியவரும்.

ஃ

நாம் நம்மில் பலரை இக்கூற்றுக்கு உதாரணமாக எடுத்துக்கொள்ளலாம். கல்வியிற் சிறந்து, புகழும் பிரக்யாதியும் அடையப்பெற்றுப் பிரகாசிக்கும் மேன்மையாளரான பலருக்கு அவர்கள் வயிற்றில் அவர்களின் பெயர் சொல்வதற்குக்கூட வழியில்லாதபடி குழந்தைகளே பிறக்காதவாறோ, அல்லது அப்படிப் பிறந்தாலும் அவ்வருமைத் தந்தைக்கு எள்ளளவும் உதவாதவாறோ, அவர்களின் பிரக்யாதியைப் பங்கப்படுத்துதற்கே தோன்றினாற் போன்றோ மக்கள் உதிக்கின்றனர். பிறருடைய குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக்கொடுக்கும் உபாத்தியாயர்கள் பலருக்கு, தானே தன் மகனுக்குப் பாடம் சொல்லிக்கொடுக்க மகவு இல்லாது தவிப்பதை நாம் கண்ணுறவில்லையா? பிறர் குழந்தைகளைச் சீர்படுத்தும் உபாத்தியாயரில் பலருக்கு தன் குமாரன் செய்யும் அடாத காரியங்களை அடக்கமுடியாது போவதும் விநோதமன்றோ?

ஃ

நற்குணங்களில் சிறந்தோராயும் எல்லோராலும் மதிக்கப்படுவோராயுமிருக்கும் சிலருக்கு உத்தம மனைவி வாய்க்கப்பெறாமல் அவளால் பல இடுக்கண்கள்பட நேர்கின்றது. எத்தனையோ பதிவிரதா சிரோன்மணிகளுக்குத் துஷ்டர்களும் குடியர்களும் பர்த்தாக்களாகி அவர்களின் ஜீவிய காலம் பாலைவனத்திலிடப்பட்ட பாலுக்கு ஒப்பாயின. எத்தனையோ நற்குணவதிகள் தங்கள் விதிவசத்தினால் கைம்மையை யேற்று நொந்து படுவோராயினர். தெய்வபக்தி நிறைந்து கடவுளை மனதில் எப்போதும் தியானித்துக்கொண்டிருக்கும் எத்தனை மனிதர்களுக்குக் கடவுளே இல்லையென்று சொல்லும் நாஸ்திகர் மனைவிமார்களாகி இல்லறத்தை முன் பாதையாக்கிக் கொடுமைப்படுத்துகிறார்கள்? பூஜையிலேயே சதா காலம் கழிக்கும் எத்தனை பூவையர்களுக்குச் சுயமரியாதை இயக்கத்தினர் மணமகன்களாகிறார்கள்? நற்புதல்வன் ஒருவனுக்கு அருமைத்தாய் இல்லாது போகிறாள். தன்னை ஈன்றதாய்-தனக்

---

*எந்த சம்பந்தமும் இல்லாத அயலானும் நம் வீட்டிற்குள் நுழைந்தவன் பிறகு வீடே தன்னுடையதென்று வழக்காடுகிறவனாகிறான், நமது தாயாதி போலவுமாகிறான். நமது மனைவி மக்களையும் எதிர்க்க வருகிறான்!*

குப் பாலூட்டிய தாய்-தன்னை அப்பா செல்வா என்றழைத்த தாய் எத்தனை பேர்களுக்குக் கொடிய விரோதியாய் விளங்குகின்றார்கள். இன்னும் உலகில் நாம் ஆராய்ந்துகொண்டே போவோமாகில் ஒவ்வொன்றிலும் ஒரு குறை தோன்றவே செய்யும். இவையெல்லாம் சர்வக்ஞனுடைய திருவிளையாடல்கள்தாம். ஆனல், அவை ஒவ்வொன்றும் நாம் முன் கூறியவாறு முற்போக்கில் விகல்பமாகவும் முரண்படுவதாகவும் தோற்றினலும், சரியாய் ஆராய்ந்தால் இறைவன் அவ்வவர்களுக்கு ஏற்றவாறே விதிப்பதாகப் புலனுகும். அதற்கு இங்கு ஒரு சிறு கதை காண்க.

ஃ

உலகத்தில் அநியாயங்கள் நிறைந்திருக்கிறதென எண்ணி அதை நிரூபிக்க உலகைச் சுற்றிப்பார்த்துவர ஆர்வமிருந்த ஒரு துறவி காட்டின் வழியாகப் புறப்பட்டு மாலைப் பொழுதில் நடந்துகொண்டிருந்தார். அது காலையில் அவர் பக்கத்தில் ஒரு யௌவன வாலிபன் அவரைப் பின் தொடர்ந்து தானும் அவருடன் வருவதாகச் சொல்லி இருவரும் சம்பாஷித்துக்கொண்டே வழிநடையின் கஷ்டம் உணராதவராய்ச் சென்றுகொண்டிருக்கையில் பொழுதும் போயிற்று. அண்டையிலிருந்த ஒரு வீட்டிற்குப் புறப்பட்டுப்போனர்கள். அவ்வீட்டுச் சொந்தக்காரன் இவ்விருவரையும் வரவேற்று உபசரித்தனன். மறுநாள் காலையில் அங்கிருந்து விடைபெற்றுப் புறப்படுகையில் வாலிபன் ஆங்கிருந்த ஒரு பொற்கிண்ணியை ஒளித்து எடுத்துக்கொண்டு புறப்பட்டான். அத்துறவி மிகவும் மனம் நொந்தாராயினும் ஒன்றும் பேசாதிருந்து விட்டார். மறுநாள் மாலை இவர்கள் வழி நடந்து கொண்டிருக்கையில் மழை பொழிய ஆரம்பித்தது. அருகாமையிலிருந்த ஒரு வீட்டை அடைந்து தாழ்ப்பாளிடப்பட்ட கதவைத் தட்டினர்கள். அவ்வீட்டின் சொந்தக்கார லோபி ஒருவன் மிகமன வருத்தத்துடன் அதிகநேரம்கழித்துக் கதவைத் திறந்து உள்ளே இருவரையும் அழைத்துக் கடுகடுத்த பார்வையாகப் பார்த்து மழை விட்டதும் வெளியேறுமாறு உத்தரவிட்டனன். பொழுதும் அதற்குள் புலர்ந்தது. அவ்வீட்டை விட்டு வெளியேறுகையில் அவ்வாலிபன் தன்னில் மறைத்து வைத்திருந்த பொற்கிண்ணியை அவனிடம் கொடுத்து வழி நடந்தான். துறவிக்கு இவ்வாலிபன் செய்யும் செய்கைகளின் தாத்பரியம் ஏதும் புரியாது இறைவனைத் தியானித்துக் கொண்டே பின்னும் வழி நடந்தார். மறுநாள் மாலை மற்றொரு இல்லம் அடைந்து அவ்விரவைக் கழித்தனர். அங்கிருந்து மறுநாள் புறப்படுகையில் வாலிபன் அவ்வீட்டுச் சொந்தக்காரனது ஒரே குமாரனின் கழுத்தைத் திருகிவிட்டுப் புறப்பட்டான். துறவி இக்கொடூரத்தைக் கண்டாராயினும் ஏதும்பேசாது பிரமிப்பே மிகவுடையவராகித் தம்வழி சென்றார். மார்க்க மத்தியில் ஒரு ஆற்றைக் கடக்கவேண்டியிருந்தது. அதற்காக ஒருவன் உதவி செய்ய வந்தான். ஆற்றை அவன்உதவியால் கடந்து சென்றுகொண்டிருக்கையில் வாலிபன் அவனைத் தண்ணீரில் தள்ளிவிட அவன் அங்கேயே முழுகி உயிர் துறந்தான்.

ஃ

இக்கொடிய செய்கையைக் கண்ணுற்ற துறவி மனம் பொருதவராய்

---

எதிர்பார்க்காத விதமாய் எத்தனையோ ஸங்கதிகள் ஏற்பட்டுவிடுகின்றன. உடனே சிக்கல்—அல்லது உடனே தெளிவு.

அவ்வாலிபனை "எதற்காக இக் கொடும் காரியங்களைச் செய்தாய்?" என வினவிக்கொண்டிருக்கும் தருவாயில் அவ்வாலிபன் தன் உருவம் மாறித் தேவவுருவம்கொண்டு, "இல்லறத் துறவியே! கடவுள் செய்யும் ஒவ்வொரு காரியமும் சரியில்லையென ஆராயவந்த துறவியே! கேட்பாயாக. நீ உன் சந்தேகத்தை முதலில் அகற்று. கடவுள் உண்மையைச் செய்கிறார். உதாரணமாக, அப்பொற்கிண்ணம் அவனிடமிருந்து திருடினது அவன் கர்வத்தை அடக்குவதற்கும், பின்னுல் டாம்பீகமாயில்லாமல் சாமான்யத்தன்மை யாவதற்கும் கடவுளை வழிபடுவதற்குமே; அந்த லோபி தான் செய்த சிறு உபகாரத்திற்கு ஒரு பொற்கிண்ணம் கிடைக்கப் பெற்றதினுல் இனி தன் லோபித்தனத்தைக் களைந்து பரோபகாரியாதல் கூடும். தனக்குப் பிறந்த ஒரே குழந்தையோடு கொஞ்சிக் கூத்தாடிக் காலத்தை வீணுக்கிக் கடவுள் வழிபாட்டை மறந்த அவனுக்குப் புத்தி கற்பிக்க அவன் மகவைக்கொன்றேன். அப்பரோபகாரியின் இல்லத்தில் இன்றிரவு களவாட இவ்வழிகாட்டி உத்தேசித்தானுதலால் அவனைக் கொன்றேன். உன் சந்தேகத்தை நிவர்த்திக்கவே உன்னைத் தொடர்ந்து உனக்கு யாவும் காட்டினேன். இப்போதாவது 'கடவுள் அவரவர்களுக்கு ஏற்றதே செய்கிறுரென்று அறி" என்று சொல்லி மறைந்தார்.

ஃ

இக்கதையினுல் நாம் முதலில் கடவுள் செயலைக் குறித்துத் தப்பெண்ணம் கொண்டாலும், அவர் அதற்குச் சரியாகத்தான் அமைத்திருப்பாரென்றும், நமக்கு நேர்வதெல்லாம் நன்மைக்கே யென்றும் கருதி மனச்சாந்தி கொள்ளவேண்டும்.

S. ஸ்ரீரங்கராஜு,
"ஜெகந்நாத பாக்".

## அதற்குப் பதில் சொல்வது இப்போதல்ல.

ஒருவனுக்கு ஒருவனிடம் ஒரு காரியம் ஆகவேண்டியிருக்கும்பொழுது அவன் மகா கர்வித்துப்போய்க் கண்டபடி பேசித் தன்னை இரத்தின ஸிம்ஹாஸனத்துக்கு உயர்த்திக்கொள்கிறுன். அவன் வார்த்தைகளுக்கு ஒரே வார்த்தையில் பதில் சொல்லி நாணவைத்திடத் தெரியும். ஆனுல், அந்த ஒருவனிடம் இப்பொழுது காரியம் ஆகவேண்டியிருப்பதால் உடனே சுடச்சுடப் பதில் சொல்லிப் பகைத்துக் கொள்ள முடிகிறதில்லை. அதற்கென்று ஒரு காலம் வரும்போது சொல்லிக்கொள்வதென்று அவ்வளவுடன் ஆத்திரத்தையடக்கி, ஆகவேண்டிய காரிய முடிவை இப்போது கவனிப்பதே சரி. இதனுல் தோல்வியொன்றுமில்லை.

நம்முடைய வேலையைச் செய்யக் கடவுள் நமக்கு சக்தியைக் கொடுக்கட்டும்.






(6-ம் வால்யம் 778-ம் பக்கத் தொடர்ச்சி.)

டிக்கன்ஸ் என்பவரது வாக்குகள்.

757. There's always a straight way to everything.

ஒவ்வொரு காரியத்துக்கும் நேரான வழியொன்று எப்போதுமுண்டு.

758. Nothing is high because it is in a high place ;.........and nothing is low because it is in a low one.

மேன்மையான இடத்திலிருப்பதாலேயே எதுவும் மேன்மையாகிவிடாது. தாழ்ந்த இடத்திலிருப்பதாலேயே எதுவும் கீழ்ப்பட்டதாகிவிடாது.

759. It is pleasant to find real merit appreciated, whatever its particular walk in life may be.

வாழ்க்கையின் முக்கிய நோக்கம் எதுவாயினும், உண்மையான அந்தஸ்தைப் புகழ்வதில் ஒரு ஸந்தோஷமிருக்கிறது.

760. A person is never known till a person is proved.

மனிதர்க்குரிய குணத்தை ரூபிக்கும்வரையில் (அதாவது ஒருவனின் செயல் பிரஸித்திகொள்ளும்வரையில்) மனிதன் வெளிக்குத் தெரியாமலே எப்போது மிருப்பான்.

761. Things cannot be expected to turn up of themselves. We must in a measure, assist to turn them up.

விஷயங்கள் தாமாகவே உதிக்குமென்று நாம் எதிர்பார்க்கலாகாது. அவ்விஷயங்கள் உதயமாக ஒருவிதத்தில் உதவி (முயற்சி) செய்ய வேண்டும்.

762. A wedding is a licensed subject to joke upon, there really is no great joke in the matter after all.

விவாகம் என்பது சரச சல்லாபம் செய்வதற்கு அனுமதிக்கப்படுகிறது. உண்மையில் அவ்விஷயத்தில் அவ்வாறு கேளிக்கைகளில்லை. (சடமைகளே பிரதானமாகின்றதென்பது கருத்து. சரசமும் ஒரு கடமை.)

763. Nothing is too bad to be retrieved.

திருத்த முடியாத அவ்வளவு மோசமானது எதுவுமில்லை.

764. Everything has an end. Even young ladies in love cannot read their letters for ever.

ஒவ்வொன்றிற்கும் முடிவு ஒன்றுண்டு. காதல்கொண்டுள்ள இள

---

ஒரு பூட்டைத் திறக்க உலகத்தில் ஒரே சாவிதானா உண்டு? இவ்வளவு பெரிய உலகில் ஜீவிக்க இந்த ஒரே வழிதானா இருக்கிறது?—வேறு பாதை எதுவும் இல்லையா? முயன்று பார். தேடியவாறு முன்னே போ.

நங்கைகளும்கூட தங்களுடைய காதற் கடிதங்களை எப்போதும் ஒரேவிதமா கப்படித்துக்கொண்டிருக்கமுடியாது. (சந்தோஷமும் பிறகு மாறிவிடலாம்— துக்கமும் கலக்கும் என்பது கருத்து.)

765. There's romance enough at home, without going half a mile for it: only people never think of it.

வேண்டியபுதுமைகள்வீட்டிலேயே இருப்பதால், நாம் அதற்காக நெடுந் தூரம் தேடிப்போகவேண்டியதில்லை. ஆனால் ஜனங்கள் அதைப்பற்றி நினைப் பதுதான் இல்லை.

766. The morning of day and the morning of life are but too much alike.

ஒரு தினத்தின் காலைவேளையும், வாழ்க்கையின் ஆரம்பமும் பெரும்பா லும் ஒத்திருக்கின்றன.

767. We need never be ashamed of our tears, for they are rain upon the blinding dust of earth, overlying our hard hearts.

நம்முடைய கண்ணீருக்காக நாம் எப்போதும் வெட்கப்படலாகாது. ஏனெனில், அது பூமியிலுள்ள தூசின் மேல் மழைபோல வருஷித்து நம்மு டைய கடின சித்தத்தை மூடுகிறது. (அதாவது இரங்கி யுருகு.)

768. I feel the sufferin's of other people more than I feel my own.

நான் என்னுடைய கஷ்டங்களை விட, மற்றவர்களுடைய துன்பங்க ளுக்கே வருந்துகிறேன்.

769. There is no substitute for thorough-going, ardent, and sincere enrnestness.

ஸம்பூர்ணமான ஆர்வத்துடன் கூடிய உண்மையான அக்கரைக்கு— (சிரத்தைக்கு) பதில் மற்றொன்றில்லை.

770. Painters always make ladies out prettier than they are, or they wouldn't get any custom.

சித்திரம் வரைவோர் எப்பொழு தும் பெண்களை மிக வனப்புட னிருக்குமாறு தீட்டுகிறார்கள். இல்லா விடில், அவர்களுக்கு வியாபாரம் நடக்காது. (அவ்விதமே ஒருவன் தன் இல்லாளைக் கௌரவித்து அழகு படுத்தினால்தான் தன் வாழ்க்கையும் சிறந்துவிளங்கும்.)

771. Hope is said by the Poet to be the nurse of Young Desire.

இளமையின் ஆசைக்கு நம்பிக் கையே வளர்ப்புத்தாயென்று கவிகள் சொல்லுகிறார்கள்.

772. Every failure teaches a man something if he will learn.

ஒருவன் கற்றுக்கொள்ள முயல்வா னாகில், ஒவ்வொரு தோல்வியும் ஏதா வதொன்று கற்பிக்கும்.

P. G குலசேகரன்,
“மனோரஞ்சினி விலாஸ்”, ராயபுரம்.

---

ஸம்ஸ்கிருதக் கதைகளின் அழகு மற்ற பாஷைக் கதைகட்கு இல்லை, வர்ணனைகளோடும் நீதிஞானங்களோடும் அழகிய பதங்கள் அடுக்கடுக்காய் அமைந்து வசனநடை பிரமித்துப்போகும்வாறு அற்புதமாய்ச் செல்லுகின் றது.

---

களங்கமற்ற கண்ணையுடையவனுகுக. உன்னுடைய கண்களில் பொழி யும் கருணை எவரும் நல்வழிப்படத்தக்கதா யிருக்கட்டும்.




## தாதா கண்ணாலம்!



“மெத்தவும் பேசினேன். உம்முடைய விருப்பம் அவளுக்கு மகா பிரியமாயிருந்தது. சிறு வயதுள்ள பால்யர்களின் பேரில் அவளுக்கு அளவற்றவெறுப்பு. கிழவர்கள் என்றால் அவளுக்கு அத்தனையும் இனிப்பு. இதைப்பற்றி அவள் பேசும்போது நீர் கேட்க வேணும். நல்ல வயதுள்ள புருஷர்களைப் பார்க்கச் சகியாள். அவலக்ஷணமான கருமை நிறமுள்ள கேசங்கள் நிறைந்த தலையுடையோரை அவள் விரும்புவதேயில்லை. வெண் ரோமம் நிறைந்த கிழவனைப் பார்க்கவே மகா ஆசை. எவ்வளவுக்குக் கிழமோ அவ்வளவுக்கு மேல். ஆகையால் நீர் இப்போது இருக்கிறதைவிட இன்னும் சிறுவயதுள்ளவர் போல் காட்டிக் கொள்ளப் பிரயாசைப் படாதேயும். அவளுக்கு அறுபது வயதுக்குக் குறையாத மாப்பிள்ளை வேண்டுமாம். கண்ணாடிபோடும் கிழவன் தான் சுகமென்கிறாள். அவள் அறையில் வாலிபர் படம் இல்லவேயில்லை. 60-வயதுக்கு மேற்பட்ட கிழவர்கள் படங்கள் தான் பார்க்கலாம். உம்மைப் பார்த்தாலே எனது கண்ணுக்குப் வெகு பிரியமாயிருக்கிறது. பாலியர் உமக்கு நிகர் அல்ல. ஸ்திரீ பார்த்துக் களிகூற உம்மைப் போலத் தான் உடுத்தியிருக்க வேண்டும். ஓ! நீர் கட்டியிருக்கும் அந்த ஒன்றரை முழ நாட்டுப்புறத்துத் துண்டு போதும்; அவளை அது மயக்கி விடும். நீர் உம் காதில் போட்டிருக்கும் பித்தளைக் கில்டு கம்பி அவள் கண்களைக் கூசச்செய்யும். சில வேளை இருமல் வந்து தொந்திரவு செய்கிறதென்கிறீர். அது ஒன்றுமில்லை. நீர் இருமுகிறது உமக்கு மெத்தப் பெருமையா யிருக்கிறது. ஆட்சேபனை என்ன? உம்முடையமுகம் எவ்வளவு கடைந்தெடுத்தாற் போலிருக்கிறது! சற்று தயவு செய்து உமது முதுகைக் காண்பியும். (முதுகைக் காட்டுகிறார்) மெத்த நேராயிருக்கிறது! நீர் நடக்கிறதை நான் பார்க்கவேணும்! (உல்லாஸமாய் நடந்து காட்டுகிறார்) உம்முடைய நடை மெத்த நாகரீகமாயும் தடுமாட்டமின்றியும் எளிதாகவும் இருக்கிறது. எல்லாம் ஏற்பாடு செய்துகொண்டு நாளையதினம் மங்கள செய்தியோடும் வருகிறேன். செலவுக்கு ஏதாவது கொடுங்கள்.”

[நூறு ரூபா நோட்டு ஒன்றை எடுத்துக் கொடுக்கத் தரகன் பெற்றுக்கொண்டு போகிறான். கிழ மாப்பிள்ளை தன்னில் தானே பூரித்து முகக் கண்ணாடியுடன் நிற்கிறார்.]

ஃ

பையன்:—(டெலிபோனில்) ஐயா, இன்று பையனுக்கு உடம்பு அசௌகியமாயிருப்பதால் பள்ளிக்கூடத்திற்கு வரமுடியாது.

---

எந்தப் பக்கம் சென்றாலும், நிச்சயமின்மை, அந்தகாரம், கலவரம், உதவியின்மை இவைகளே எதிரிடக்காண நேரிடுகிறதே என்ற கவலையாற் பொங்கிய மனத்தின் அவதிதான் என்னே!

உபாத்தியாயர் :—(டெலிபோனில் பேசுவது பையனே என்று தெரிந்து) இப்போது பேசுவது யாரென்று வினவ,

பையன்:—(பயந்து) சார், என்னுடைய தந்தை பேசுகிறார்.

ஃ

வழிப்போக்கன்:—தம்பி, ஆஸ்பத்திரிக்கு வழி எது?

குறும்புக்காரப் பையன்:—அதோ போகும் மோட்டார் வண்டியின் கீழ் விழுந்துவிடுங்கள்; உடனே ஆஸ்பத்திரிக்குப் போவீர்கள்.

ஃ

குப்பி:—ஏண்டி, அவர்கள் வீட்டுச் சங்கதி எப்படியடி?

சுப்பி:—அதை ஏன் கேட்கிறாய்? தாயோ வாயாடி. தகப்பனோ பொய்யுருவம். பிள்ளையோ வேசிகாந்தன். மருமகளோ அடக்கமில்லாப் பெண். குடும்பம் அமைதியாக எப்படி நடக்கும்? நான் அங்கே போகும்போதெல்லாம் ஒரே கூச்சல்தான்; ஓயாச் சண்டை தான். ஃ

மனைவி:—நேற்றுதானே அந்த வேஷ்டியைத் துவைத்தேன். அதற்குள் இவ்வளவு அழுக்காக்கி விட்டீர்களே?

கணவன்:—என்ன அழுக்காகிக் கிழிந்தாலும் இதற்கு ஒரு ரூபாய் தான் விலை. நீயோ ஐம்பது அறுபது ரூபாய் சேலையைக் கட்டி நசுக்கிக் கசக்கிப் பாழாக்கிக் கிழிக்கிறாயே. அதுமட்டும் உனக்கு ஏன் தெரியவில்லையோ?

ஃ

சர்மன்:—எதிர் வீட்டுக்காரருக்கு என்ன உத்தியோகமோ? பெரிய மனிதராகத் தோற்றுகிறாரே?

ரங்கன்:—அவர் "ஏமாற்றும் வித்தை" இலாக்காவைச் சேர்ந்தவர். தனக்குப் பத்து ஏக்கர் நிலம் தஞ்சாவூர்ப் பக்கத்தில் இருக்கிறது என்பார். ஐந்து வீடுகள் கட்டிப் போட்டிருக்கிறேன்; அதில் ஒரு வீட்டுக்கு ரிப்பேர் செலவு இப்போது 400-ரூபாய் பிடித்தது என்பார். வெளியில் கொடுத்த இடத்தில் 2000-ரூபாய் வரவேண்டுமென்பார். தனது நாட்டுப் பெண்ணுக்கு 1000—ரூபாய்க்கு நகை செய்தேனென்பார். படே படே ஜமீன்தார்கள் தனது பால்ய சிநேகிதர்கள் என்பார். கணக்குப் புஸ்தகத்தை எடுத்து வந்து ஆயிரக்கணக்கில் காட்டுவார். திருக்குறள், கம்பராமாயணம் முதலிய பத்து புஸ்தகங்களை எதிரில் கொண்டுவந்து போட்டு எல்லாம் மனப்பாடம் என்பார். ஒரு வரிகூட அதில் வாசிக்கத் தெரியாது. இதே மாதிரியில் தான் அவர் பேச்சு, எல்லாம் புழுகு மயம்தான். யோக்கியம் என்பதோ வெகு பூஜ்ஜியம்!

ஃ

கோபு:—என் கடிதங்கள் எதற்குமே நீ பதில் எழுதவில்லையே?

நாணு:—ஒரு கார்டின் விலை முக்காலணா. அதற்குக் காய் கறிகள்

---

தற்கால வியாபாரச் சுணக்கமானது வெகுபேருக்குத் தங்களின் வாழ்வுத்தாத்தையும் முன்பு நடத்திய செலவுகளையும் குறைத்துக்கொள்ளவேண்டிய நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தித் தத்தளிக்க வைத்திருக்கிறது. இந்த நிலையில் அரிசி 5½ படியும் 6-படியும் விற்பது கடவுள் கிருபைதான். அவ்விதமின்றி ரூபாய்க்கு 3-படி அரிசியாகிவிடின் பெரிய தவிப்புச் சங்கதிதான்.

வாங்கினுல் ஒரு தினம் பொழுது போய்விடும். என்ன செய்கிறதப்பா.

ஃ

நந்தன் :—கந்தனுக்கு எத்தனை குழந்தைகள் ?

ரங்கன் :—அவனுக்குக் குழந்தைகளே யில்லை. பாவம் !

கந்தன் :—அப்படிச் சொல்லவேண்டாம். இப்போது என் மனைவி 5-மாத கர்ப்பம்.

ரங்கன் :—கந்தன் எப்போதும் இப்படித்தான் சொல்வது வழக்கம். போன வருஷத்தில்கூட இப்படியே தான் சொன்னுன்.

ஃ

—"அவன் இரண்டணு உன்னைக் கேட்டதற்கு ரூபாயை எடுத்துக் காண்பித்தாயே. பெட்டியில் சில்லரை யில்லையா ?"

—"இல்லாமலல்ல. கொடுத்தால் திரும்பி வராது. அதனுல் தான் சில்லரையில்லை யென்று ரூபாயைக் காண்பித்தேன்.

ஃ

தங்கை :—அக்கா ! உனக்கு நேற்று சாந்தி யாச்சுதே. அந்த சங்கதிகளைச் சொல்லு.

தமக்கை:—உனக்கும் அந்த வயது வந்துநடக்கும்போதுதெரிந்துகொள்.

ஃ

கோர்ட்டார் :—உம்முடைய அந்தஸ்து என்ன ? எவ்வளவு சொத்துள்ளவர் ?

சாக்ஷி :—4000-ரூபாய் பெறுமானமுள்ள மோட்டார் எனக்கு இருக்கிறது.

கோர்ட்டார்:—உம்முடைய மோட்டார் ஏலத்தில் 200 ரூபாய்க்குக் கூடக் கேட்கலாம். அது ஒரு சொத்து ஆகாது. வீடு, நிலங்கள் உண்டா ?

சாக்ஷி :—அவைகளை விற்றுத் தானே மோட்டார் வாங்கினேன்.

ஃ

"—விவாக ரத்து செய்து கொண்டு பிரிந்துபோய்விட்ட மனைவியை ஏன் மறுபடியும் அழைத்துக் கொண்டீர் ?"

"—பிரிந்த புருஷனும் மனைவியும் மறுபடி ஒன்றுகூடிக்கொண்டால் கோர்ட் ரத்து என்ன செய்ய முடியும் ? அன்று கட்டிய தாலியே இப்போதைக்கும் போதுமென்றும் ஊரார் ஒப்புக்கொள்வார்கள். இப்போது என் மனைவி நாலு மாசம்".

ஃ

வினு :—ஒருவர்மீது வழக்கை ஆரம்பிப்பதற்கு முன் முதலில் தொடங்கும் பூஜை எது ?

விடை :—பசிக்கு முதலில் பலருடன் காப்பிஹோட்டல் பூஜை; பிறகு ஜட்காவண்டி. பிறகு வக்கீல் தரிசனம். ஒவ்வொரு வக்கீலின் வீடும் சிறு கோர்ட்போல் பிரமாதமா யிருக்கும்.

---

பதட்டம் பொறுமை ஒரு மனிதனை எவ்வளவுதூரம் வாட்டுவிக்கின்றதென்று நீ எப்போதேனும் சிந்தித்துப் பார்த்ததுண்டா ? பார்த்துப் புதிய அறிவு பெறுக. திருந்துக.

---

தங்களின் சுயலாபத்திற்காகவென்று பிறருக்கு வஞ்சனையாகப் புத்தி சொல்வதுபோல் நடித்துப் படுகுழியில் வீழ்த்துவோருமுண்டு. எனவே, மற்றவர் எவ்வளவு புத்தி கூறினும்—உன் சொந்தப் புத்தி கொண்டே எதுவும் நிதானமாக யோசி.




**முதல் பாத்தியதை** :—ரயில் வண்டியில் எவர் முன்னதாக ஏறி உட்கார்ந்தனரோ அவர்கட்குத்தான் அந்த இடம் முழுப் பாத்தியதையாம்; மற்றவர்கள் இடமின்றித் தவிப்பினும், தாங்கள் சிறிதும் கவனிப்பதில்லை. சற்று ஒதுங்கி உட்கார்ந்து இடம் விடக்கூடியதாயிருப்பினுங்கூட அவ்விதம் செய்வதில்லை. எவர் எப்படிக் கஷ்டப்பட்டாலென்ன, தாம் சௌகரியமாய் உட்கார்ந்து கொண்டாய்விட்டதல்லவா என்று அதைமட்டும் கவனித்துக் கொண்டு அலக்ஷியமாகிறார்கள். எந்த சமயத்திலும் தாங்கள் பிறருக்கு உபகாரியாக இருக்கப் பார்ப்பதும், அதற்காகத் தமது சௌகரியம் குறையினும் பிறரது சௌகரியத்தையே விசேஷமாய் நாடுவதுமாக நமது குணம் பெருந்தன்மையின் வழியே செல்லும்படி நாம் பழகவேண்டும்.

**குழந்தைகள் கற்பிக்கும்** நல்ல **புத்திமதி** :—எவ்வளவு பிரமாதமான சண்டைகள் தங்களுக்குள் உண்டாயினும், அதை அடுத்த நிமிஷத்தில் குழந்தைகள் மறந்துவிட்டு மறுபடியும் ஒன்றுகூடிக் கொள்கின்றன. தம்மை யடித்த தாய்தந்தையரையே மீண்டும் கட்டியணைத்துக் குதூகலப்படுகின்றன. இந்தப் பெரிய புத்தியை நாம் குழந்தைகளிடமிருந்து கற்றுக் கொள்வோமாகில், நமது வாழ்நாளில் எந்தப் பகையையும் பொருட்படுத்தாமல் சமரஸமாகவே தீர்த்துக்கொண்டு ஸந்தோஷமாக வாழ்வதற்குக் கூடும். சிறு குழந்தைகளின் சிறு சண்டையில் பெற்றோர்கள் புகுந்து இவ்வீட்டினரும் அவ்வீட்டினருமாகப் பெரும் போரிட்டுக்கொள்ளுகின்றனர். என் குழந்தையை உங்கள் பையன் ஏன் அடிக்கவேண்டுமென்று கோபங் கொதிக்கின்றனர். இதனால் பெரியோர்களுக்குள் விரோதம் முற்றுகின்றது. இதைவிட இருபக்கத்தினரும் ஒருமைப்பட்டுப் பிசகு செய்த குழந்தையைக் கண்டிப்பது உத்தமமாகும்.

**இருவகை ஆஸ்தி** :—வாலிபபிராய முதற்கொண்டே சிறுகச் சிறுகத் திரவியம் சேர்த்து வைத்து முதுமையில் கவலையற்றுச் செலவிடுவது ஒரு வகை. தம்மை லைப் இன்சூரன்ஸ் கம்பெனியில் பதிந்துகொண்டு அதில் கிரமமாகப் பணம் செலுத்திவிட்டு, எஞ்சிய மற்றதை யாவும் தாராளமாகச் செலவிட்டுவிட்டுக் கடைசியில் ஒரே மொத்தமாக இன்சூரன்ஸ் தொகையைப் பெற்று அதை ஆஸ்தியாகக் கொள்ளுதல் மற்றொரு வகை. இவ்விருவகையிலும் மிதமாக எக்காலத்திலும் அளவறிந்து நிதானச் செலவில் நிற்பதே க்ஷேமத்திற்கு மார்க்கமாகும்.

**பராமுகம்** :—நீ ஒரு வண்டியில் சுகமாகச் சென்றுகொண்டிருக்கும்பொழுது உனக்குத் தெரிந்தவர்கள் கால்நடையாகப் போவதைப் பார்ப்பின், நமக்கென்ன வென்றிருக்கக் கூடாது அவர்களையும் உன் வண்டி

---

"நெய்" என்றால் "வெண்ணெய் உருக்கிய சத்து" என்று சட்டத்தில் வியாக்கியானம் செய்யப்பட்டிருக்கிறது.

யில் ஏற்றிக்கொண்டு செல்வதில் உனக்கு நஷ்டமொன்றுமில்லை. அவ்விதம் அன்னோரை உபசரிப்பது வெகு காலத்திற்கு அவர்கள் அதை நினைக்கும்படியும் செய்துவிடும். கடவுள் தந்த செல்வம் ஒருநிலையல்லவாதலின், நமக்கு யாவும் கூடியிருக்கும்பொழுது எதுவரையில் பிறருக்கு உபகாரிகளாக இருக்க இயலுமோ அவ்வளவுக்கும் பரோபகாரமாய் நடந்துகொள்வதே நாம் இவ்வுலகில் பெறக்கூடிய பெரும்பேறு ஆகும். ஒருதடவை பரோபகாரமான வழியில் நாம் பழகிவிடின் பிறகு நமது மனம் அதனிலுள்ள இன்பச் சுவையை நெடுகக் கண்டுகொள்ளத் துணிந்துவிடும். எப்பொழுதும் பிறரது கஷ்டத்தை நோக்கி இரங்கும் ஹிருதயம் நமக்கு வேண்டும்.

பழய பேரிய சொத்து :—எந்தப் பத்திரிகைகளையும் கெட்டுவிடாமற் காத்துச்சேகரித்துவைத்துப் பயிண்டு செய்துகொண்டால் அவை விலைக்குங் கிடைக்காத அரிய மாணிக்கங்களாகும். தினசரிப் பத்திரிகைகளை மளிகைக்கடையில் விற்றுத்தொலைப்போர் பலர். அவற்றை ஒன்றுசேர்த்துப் பயிண்டு செய்துகொள்ளின் தம் தாய்நாட்டின் பழய சம்பவங்களையெல்லாம் பிற்காலத்தில் படித்து இன்புறுதற்கும், அறிவுவிர்த்தி பெறுதற்கும் எத்துணையோ உதவியாக இருக்கும். வாரப்பத்திரிகை, மாதப் பத்திரிகைகளையோ கட்டாயம் ஒன்றுசேர்த்துப் பயிண்டு செய்வது அவசியமாகும். அவ்விதம் செய்யாதோர் கையிற் கிடைத்த தனத்தை இழந்தோரேயாவர்.

கடவுள் வைத்த முகூர்த்தம் :—ஒரு நண்பரை நீண்டநாட்களாகக் காணவேண்டுமென்று நினைத்து வெகு ஆவலுடனிருக்கிறோம். ஏதோ ஒரு காரியார்த்தமாகச் சென்ற இடத்தில் திடீரென்று அவரது முதல் சந்திப்பு நமக்குக் கிடைத்துவிடுகின்றது. நம்மைக் கண்ட நண்பர் நமது முகம் தெரியாமல் "நீங்கள் யார்?" என்று கேட்கிறார். நாமும் சந்தோஷமாக நமது பெயரைக் கூறுகையில் அவரும் இந்த எதிர்பாராத சந்திப்பை நோக்கி ஆச்சரியப்பட்டு மிகு பரவசராய் விடுகின்றார். இது கடவுள் வைத்த முகூர்த்தமாகும். அந்த வேளை நெருங்கியதும் பரஸ்பர சந்திப்பும் நேர்ந்துவிட்டது. ஆனால், நமது அலுவலின் தொல்லையில் உடனே பிரியவேண்டியிருப்பது எவ்வளவோ மனக்கஷ்டத்தைத் தரக்கூடியது. எனினும், நமது உண்மையான அன்பானது மீண்டும் சந்திப்போமென்று நமக்குத் தைரியம்கூறி நம்மைத் தேற்றுகிறது.

C. V. N. நாராயணன் செட்டியார்.



ஒரு பண்டத்தைத் தட்டுக்காரனிடம் இரவில் வாங்கும்பொழுது தாங்கள் முதலில் பணத்தைக் கொடுத்து பாக்கி சில்லரையைக் கேட்காமல், முதலில் அந்த சில்லரையைப் பெற்று விளக்கு வெளிச்சத்தில் தேய்ந்த—செல்லாத நாணயமாவென்று பார்த்துப் பிறகு பணத்தை அவனிடம் தருவதே மேல். ஏனெனில், செல்லாத நாணயத்தைக் கொடுத்து நாம் அதைத் தெரிந்துகொள்வதற்குமுன் அவன் மற்றொரு வீதிக்குப் போய் மறைந்துவிடலாம்.

---

பல பத்திரிகைகளைப் படிக்கலாம். உன் அபிப்பிராயத்தைமட்டும் ஒரு தனியாக வைத்துக்கொண்டு பத்திரிகைகளின் அபிப்பிராயம் உன் அபிப்பிராயத்துக்கு எவ்வளவுதூரம் பொருந்தி வருகிறதென்று யோசித்துப் பார்க்கப் பழகு.

# பிராது எழுதுவதைப்பற்றி.

(ஒரு பிரபல வக்கீலின் அநுபவ வாசகம்)



பிராது நானே எழுதிக் கொடுக்கத் தயாராயிருக்கிறேன். ஆனால், சில விஷயங்கள் கவனிக்கப்படவேண்டும். சாதாரணமாய் ஓரிடத்தில் ஒரு வக்கீலிடம் பிராது எழுதி, அதை மற்றோர் வக்கீலிடம் கொடுத்தால், அதுவிஷயமாகக் கேஸை நடத்தும் அந்த மற்றோர் வக்கீலுக்கு அதில் அக்கரை அதிகம் இராது. ஸ்வீகார புத்திரனுக்கும் சொந்த புத்திரனுக்கும் உள்ள வித்தியாஸம் இருக்கும். ஸ்வீகாரபுத்திரனும் புத்திரன்தான். ஆனாலும் தனக்கு நேரில் பிறந்த புத்திரனல்லவே! இந்த பேதம் எங்கும் உண்டு. நான் எழுதிக் கொடுக்கும் பிராதை கேஸை நடத்தப் போகிற அந்த மற்றொரு வக்கீலே எழுதுவாரானால் அது அவருக்குத் திருப்தியாக இருக்கும். இதன் காரணம் என்னவென்றால், ஒரு வக்கீல் கேஸ் எழுதும்போதே இன்னின்ன விதமாக எதிர்வாதம் வருமென்றும், அதற்கு இன்னின்னவிதமாக ஜோடித்தால் தாம் ஜவாப் சொல்லலாம் என்றும் அப்போதைக்கே மனதில் ஏற்பாடு செய்துகொண்டு பிறகு உணர்ச்சியோடும் ஊக்கமாய் எழுத ஆரம்பிப்பார். ஒரு பிராதை நான் எழுதினாலும், அவர் எழுதினாலும்— பொதுவாக விஷயம் ஒன்றாகவே இருந்தபோதிலும் மனோபாவம் ஒன்றாக இருக்காது. கடைசியாகக் கேஸ் கெட்டுவிடும் பக்ஷத்தில் "ஓ! உங்கள் வக்கீல் பிராதை சரியாய் எழுதவில்லை" என்று சொல்லிவிடுவார்கள். பட்டணத்திலிருந்து எவ்வளவு பெரிய வக்கீலிடம் பிராதை எழுதி வந்தபோதிலுங்கூட இதே கதிதான் ஆகும். ஒருசமயம் கேஸ் ஜெயித்து விட்டால் "என் சாமர்த்தியத்தினால் ஜெயித்தேன்; உங்கள் வக்கீல் எழுதித்தந்த பிராது அவ்வளவு சுகமில்லை" என்பர். ஆகையால், பிராதை எழுதி ஜோடிக்கும் பாரம் எந்த வக்கீல் கேஸை நடத்துகிறாரோ அந்த வக்கீலிடமே போட்டுவிட்டால் தான் நல்லதென்று தோன்றுகிறது. சில வக்கீல்களுக்கு மற்ற வக்கீல்கள் எழுதிக்கொடுத்த பிராது சரியானதா அல்லவா என்பதையே கவனிக்க சாமர்த்தியமில்லாமல், அதிக தேர்ச்சியில்லாததால் உடனே அந்தப் பிராதை வாங்கி அப்படியே தாக்கல் செய்து விடுவார்கள். சிலர் முழுதும் சரியாயில்லை; வேறு விதமாகப் பிராது எழுதவேண்டுமென்று கூறுவார்கள். அது அவரவர்களின் சாமர்த்தியத்தன்மை, பொறுமை முதலியவைகளைப் பொறுத்திருக்கும். ஆகவே என்னைக்கொண்டு பிராது எழுதிக் கொண்டு செல்வதைவிட, நீங்கள் கேஸ் நடத்தப்போகும் வக்கீலைக் கொண்டே பிராது எழுதுவித்து அதை எனக்குக் காண்பிப்பது நலமாக இருக்கும். அப்பொழுது அதைப் பற்றி நான் ஏதாவது சொல்லமுடியும். பிராது எழுதும் இந்த ஒரு விஷயத்தில் இவ்வளவுதூரம் கவனிக்க வேண்டிய விஷய மிருக்குமென்று நீங்கள் நினைத்திருக்கமாட்டீர்கள். எந்த ஒன்றிலும் புகுந்து பார்ப்பின் பல நுட்பமான விஷயங்கள் இருக்கக் காணலாம்.




# விவாக விடுதலை.



இரண்டு தினங்களுக்குமுன் எங்கள் பந்துக்கள் வீட்டிற்கு நான் சென்றிருந்தேன். அப்பொழுது அவ்விடம் பக்கத்து வீட்டுப் பெண்கள், எதிர்வீட்டுப் பெண்கள் யாவரும் உட்கார்ந்து கொண்டு வம்பு பேசிக்கொண்டிருந்தார்கள். நானும் அவர்களுடன் சேர்ந்துகொண்டு அவர்கள் மாதிரியே வம்பளக்க வேண்டுமென்ற உத்தேசத்துடனே தான் அங்கு போனேன். என்னைப் பார்த்தவுடன் அங்கு வந்திருந்த ஓர் பெண் ஒரு கிழப்பாட்டியை நோக்கி "பாட்டி, பார்த்தீர்களா! புதிதாக சட்டம் வந்திருக்கிறதாம். இதோ வந்திருக்கும்பெண் உத்யோகம் பார்க்கிறாள். இனிமேல் உங்கள் பிள்ளைசெய்யும் உத்தியோகம் நீங்கள் செய்யவேண்டும். உங்கள் பேரனுக்குப் பதிலாக பேத்தி படிக்க வேண்டும். புருஷர்கள் வீட்டுவேலை செய்து குழந்தைகளைப் பார்த்துக் கொள்ளவேண்டும் போலிருக்கு" என்று சொல்லிச் சிரித்தாள். பாட்டி என்னை நோக்கி, அது என்ன புது சட்டம்; கொஞ்சம் சொல்லு என்று வேண்டினாள். எனக்கும் பேசுவதற்கு ஆவலதிகரிக்கவே நானும் பேசத் தொடங்கினேன்.

ஃ

இப்பொழுது நம் ஹிந்துக்களுள் மனைவியிடத்து வெறுப்பு வந்தபொழுது, குற்றமற்றவளா யிருந்தாலும் அவளை விலக்கி விட்டுப் புருஷன் மற்றோர்பெண்ணை விவாஹம் செய்து கொள்வது வழக்கமாயிருக்கிறது. இதை சாஸ்திர ஸம்மதம் என்றுகூட நம்புகிறார்கள். ஆனால், புருஷன் பைத்தியக்காரனாயினும், துன்மார்க்கமுள்ளவனாயினும், தொண்டு கிழவனாயினும் அவனுடன் ஸ்திரீ குடித்தனம் செய்யவேண்டுமாம். இப்படிப்பட்ட ஏற்பாட்டினால் அனேக புருஷர்கள் தங்கள் மனைவிமார்களை நிர்க்கதியாக விட்டு விட்டு மறுமணம் புரிகிறார்கள். ஸ்திரீகளுக்குங்கூட அப்படிப்பட்ட உரிமையிருந்தால் புருஷர்கள் கொஞ்சம் பயந்து ஜாக்கிரதையாக இருப்பார்கள். இந்துக்களைத் தவிர மற்ற மஹம்மதியர்களிடையும் கிறிஸ்தவர்களிடையும் இவ்விவாக விடுதலை என்பது வழக்கத்தில் இருக்கிறது. இந்து ஸ்திரீக்கும் அப்படிப்பட்ட உரிமை இருத்தல் அவசியம். நம்மில் சிலர்,

---

*அசுத்தமான எண்ணத்தின் நிழலில் நில்லாதே. அந்தத் தீய எண்ணமே உனக்கு இனி நேரவிருக்கும் துன்பங்களுக்கெல்லாம் அடிப்படை. முதலில் எண்ணம்; பிறகு செயல்.*

இப்படிப்பட்ட உரிமை இருக்கும் பக்ஷத்தில் ஸ்திரீகள் விபசாரிகளாய் விடுவார்களென்று நினைக்கிறார்கள். அது மிகவும் தப்பான எண்ணம். துர்க்குணங்கள், நற்குணங்கள் என்பவை அவரவர்களின் கர்மானுஸாரத்தை யொட்டி அமைந்திருக்கும். மிகவும் கண்டிப்பாய்க் காவலில் வைக்கப்பட்டிருக்கும் பெண்கள் கெட்டுப் போவதைப் பார்த்ததில்லையா? என்னுடைய சினேகிதைகளில் மூவர் அவர்களது புருஷர்களால் ஒதுக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்கள் நிரபராதிகளென்று நான் நிச்சயமாகச் சொல்வேன். அவர்களில் ஒருத்தி 12-வயது ஆகும் பொழுது ஒருநாள் பாடசாலைக்குப்போய்க் கொண்டிருக்கையில் வழியில் அவள் புருஷன் அவளை மறித்து பலாத்காரமாய் ஓர் ஸண்டியிலேற்றித் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்று மூன்று நாள் வரையில் வெகுவாய் "ஹிம்ஸை"ப் படுத்தினாராம். அப்பொழுது அப்பெண் "ஹிம்ஸை"யைப் பொறுக்க மாட்டாமல் தாயார் வீடு செல்கிறேனென்று அழுதபொழுது இனிமேல் இங்கு குடித்தனம் செய்ய வரவில்லை என்று அவள் கைப்பட ஓர் கடிதம் எழுதி வாங்கிக்கொண்டு அவளை அனுப்பி விட்டாராம். அவளுக்கு 15-வயது ஆனபொழுது, உலகத்தார் தன்னைப் பற்றிச் சொல்லும் நிந்தை மொழிகளைத் தாங்காதவளாய், புத்தியடைந்து தன்னை வந்து அழைத்துப் போகும்படி தன் புருஷனுக்கு ஓர் கடிதம் எழுதினள். ஆனல், அந்தக் கல் மனதுடையவனே கெட்ட பால் மறுபடியும் சரியாகப் போவதில்லை என்று சொன்னதோடு பத்து தினங்களுக்கெல்லாம் மற்றோர் பெண்ணை மணம் புரிந்து பல்லக்கின் மீதேறி என் சினேகிதையின் வீட்டு வாசலின் வழியே ஊர்கோலம் சென்றான். இது புருஷர்களின் நியாயமான செய்கை என்று சொல்லலாமா? ஒரு காரணமுமில்லாமல் ஓர் மனைவியை அழவிட்டு மற்றொருத்தியை மணம் புரிவதென்பது, புருஷர்களுக்கு ஸ்திரீகளின் பேரில் ஸகல அதிகாரங்களும் இருக்கின்றன என்று தெரிவிப்பதைத்தவிர வேறொன்றுமில்லை" என்று நீண்டதோர் பிரசங்கம் செய்தேன்.

ஃ

இதை யெல்லாம் அங்கிருந்தவர்கள் காதுகளை மூடிக்கொண்டு கேட்டுக்கொண்டிருந்தார்கள். அங்கே சந்திர பிம்பத்தைப்போன்ற 16-வயதுள்ள ஓர்பெண் உட்கார்ந்திருந்தாள். அப்பெண்ணின் தாயார் கண்ணீர் விட்டு அழுதாள். அப்பெண்ணிற்கு சரீரம் எல்லாம் உஷ்ணப்பட்டு விட்டது. அப்பொழுது அந்த அம்மாள் மகா உக்கிரகத்துடன் "நிஜம்தான் அம்மா; என் பெண் இப்பொழுது என்ன செய்வதோ தெரியவில்லை. மூன்று வருஷங்களாய் அழைத்துக் கொண்டுபோகும்படி மாப்பிள்ளையை எவ்வளவோ வேண்டிக்கொண்டும் பயனில்லை. பதினாயிரம் ரூபாய் கொடுத்தால் அழைத்துப் போவதாய்ச் சொல்லுகிறான். எங்களிடத்தில் அவ்வளவு பணம் இல்லை. நாங்கள் ஸம்ஸாரிகள். புருஷன் வீட்டிற்குப் போக வேண்டுமென்று ஏக்கமாயிருக்கிறான். நான்கு தினங்கள்முன்பு தான் அவன் மற்றொரு கலியாணம் செய்துகொண்டானும். அதைக் கேட்டதும் என் பெண்ணிற்கு இன்னும் துக்கம் அதிகரித்துவிட்டது. இப்படியிருக்கிறது

---

*ஆசிரியர்களுக்கு இரவுப்பொழுது ஸர்வ சுதந்திரமுள்ள காலம். அவர்களின் வேலையைக் கெடுக்க எவரும் அருகிரார். எழுதுகோலும் வெகு விரைவாக ஓடும். பகலில் அப்படி ஓடாது. வழக்கமே காரணம்.*

எங்கள் ஸங்கதி" என்று முறையிட்டான்.

ஃ

புருஷர்களது பல மனைவிகளின் விவாஹத்தினுலேயே ஸ்திரீகளுக்கு விடுதலை அவசியமென்று ஏற்படுகிறது. ஹிந்து ஸ்திரீக்கு பதிவிரதா தர்மத்துக்கு மேலானது ஒன்றுமில்லை. அது அவர்களுக்கு வழக்கமாகவே ஜென்ம சுபாவமாகவே வந்துவிட்டது. இந்த விடுதலையென்ற பெயரால் ஹிந்து ஸ்திரீகளது பதிவிரதா தர்மத்திற்குக் கெடுதல் வருமென்பது அல்ல. தர்ம சாஸ்திரத்தில் கூட ஸ்திரீ புருஷனுக்கு ஸஹதர்மிணி என்று சொல்லப்பட்டிருக்கிறதே தவிர அடிமை என்று எழுதப்படவில்லை. தம்பதிகளிடையே உண்மையான காதலிருக்கும் பட்சத்தில் விடுதலை அவசியமில்லை. ஆனுல், பரம விரோதத்துடன் குடித்தனம் செய்வதைக் காட்டிலும் விடுதலை அல்லது விவாக ரத்து இருவருக்கும் நன்மை. தப்புவழியில் செல்லும் புருஷனுடன் குடித்தனம் பண்ணுவதைவிட வைதவ்யம் அனுபவிப்பதே மேலாகும். விவாக ரத்துச் சட்டம் வந்தால் ஸ்திரீகள் தங்கள் புருஷரை நிஷ்காரணமாய் விலக்கிவிட்டுப் பதிவிரதா தர்மத்திற்குப் பங்கம் விளைவிப்பார்களென்று எண்ணுவது பிசகாகும்.

ஸ்ரீ காமாக்ஷி அம்மாள்.

[நமது ஸகோதரியார் குறிப்பிட்டுள்ள புருஷ அக்கிரமங்களை ஒரு பெண்ணுடன் பிறந்த நாம் மறுப்பதற்கில்லை. ஆடவரிற் பல்லோர் தம் மனைவியை அடிமையிலும் கேவலமாகவே எண்ணிப் படுத்தும் பாடுகளை நோக்கில், விவாக ரத்து சட்டம் சரியானதல்லவென்கிற நமது அபிப்பிராயத்தை நழுவவிடவும் நேர்கின்றது. விதவா விவாக சட்டத்தால் எல்லா விதவைகளும் விவாகம் செய்துகொண்டுவிட்டார்களென்பதில்லை. அவ்விதமே, விவாக ரத்து சட்டம் ஏற்படினும் அதனுலேயே எல்லா நங்கையரும் விவாகரத்து செய்துகொள்ளப் போவதுமில்லை. மேலும், ஒரு பெண்மணி விவாகரத்து செய்துகொண்டதற்குப்பின் யாது செய்வதென்பதும் ஒரு கேள்வி. ப-ர்.]

---

## அதிகமாகக் கசக்காதே.

பின்னுக்கு அவனிடமே உனக்கு ஆகவேண்டிய காரியங்கள் இருக்கும்போது, இப்பொழுது ஒரு சிறு சங்கதியில் அவன் மனத்தை அதிகமாகக் கசந்து போகும்படி செய்துவிடாதே. அதனுல் அன்பு என்பது முறிந்துபோய் ஆத்திரம் என்பது தலைக்குமேல் உயர்ந்துகொள்ளும். இப்பொழுது அவனை நெருங்கிப் பிடித்து நசுக்கி உன் காரியத்தை நிறைவேற்றிக்கொண்டாலும், அதனுல் அவன் மனதில் உண்டான கசப்பும் வெறுப்பும் பின்னுக்கு அவனிடமிருந்து நீ எவ்வித உதவியும் பெற முடியாதபடி செய்து அவனை விலகிப்போகவும் வைத்துவிடும். பிறகு நீயும் அவனும் ஒன்றுபட்ட மனமாக ஆவது கிடையாது. எதிலும் ஒரு அளவு ஒரு மரியாதை வேண்டும்.

விவேகம்
விநோதம்
விசித்திரம்
விகடம்




அநுபவம்
அற்புதம்
ஆச்சரியம்
ஆநந்தம்

# உலகம் கசக்கிறதா?



ஓ அம்மா! அக்கா! தங்கச்சீ!

உனக்கு உலகம் கசக்கிறதா? எண்டா டமாரா வாயா! அண்ணா! தம்பீ! உனக்கு உலகம் கசக்கிறதாடா? ஏஏஏஏ தாத்தா! ஏ ஏ ஏ ஏ பாட்டீ! உனக்கு உலகம் எப்படியிருக்கிறது?— கசக்கிறதா? ஆணாகப்பிறந்த ஐயாவே! பெண்ணாய்ப் பிறந்திருந்தாலும் காலிலே கொலுசு, கையிலே கொலுசு, கழுத்திலே காசுமாலை, சரடு பதக்கம், கெடியார கொலுசு, இடையிலே தங்க ஒட்டியாணம், மூக்கிலே வைர மூக்குத்தி எல்லாம் அணிந்து சேலை—பாவாடை—ரவிக்கை யுடுத்திக்கொண்டு அழகு சுந்தரியாய் விளங்கியிருக்கலாமே என்று நினைக்கிற வழியிலே உமக்கு உலகம் கசக்கிறதா? பெண்ணாகப் பிறந்த மாதரசியே! ஆணாகப் பிறந்திருந்தாலும் தலைமை நாயகமாயிருந்து அதிகார சுதந்திரத்தோடும் சுயேச்சையாய் வாழ்ந்திருக்கலாமே—இந்தப் பெண் கட்டையாய்ப்பிறந்து, 'பெண் ஜென்மமோ, புண் ஜென்மமோ' என்ற கதையாய் எந்நேரமும் அடுப்பும் சட்டியும் சமையலறையும், சாணியும் துடைப்பமுமாய் எல்லோருக்கும் உட்பட்டுக் கிடக்கவேண்டியதாச்சுதே என்று எண்ணுகிற வகையிலே உனக்கு உலகம் கசக்கிறதா? இன்னும் மீசை வரவில்லையே என்று நீளச் சிந்திக்கிற சங்கதியிலே ஏ ஏ சின்னஞ் சிறுவனே! உனக்கு உலகம் கசக்கிறதா? எத்தனை நாளைக்குத் தான் இப்படிச் சின்ன பெண்ணாகக் கிடக்கிறது—எப்போ பெரிய பெண்ணாகிறதோ—என்றைக்குக் கல்யாணப் பெண்ணாய்க் கண்ணாளன் கையைப் பிடிக்கிறதோ என்று வாட்டமுறுகிற சங்கதியிலே ஓ ஓ அழகுச் சிறுமியே, பாலிகா மணியே, உனக்கு உலகம் கசக்கிறதா?

ஃ

யார்தான் உலகம் கசக்கவில்லையென்று சொல்லுகிறார்கள்? உலகத்தின் கோணல்களைப் பார்த்தாலும் அங்கங்கேயும் கசப்பாகத்தான் காணுகிறது! நமக்குத் தெரிந்தவர்களாயிருக்கிற பலரும் மனம் ஒன்றும், பேச்சு ஒன்றும், நடை யொன்றுமாய்த் திரிகிறார்களேயன்றி, உண்மை நடையுள்ளவர்களை எங்கே காண முடிகிறது? அதை நினைத்தால் கசப்புத்தானே! சிலர் ஒருவர்மீது எவ்வளவோ பொறாமைகொண்டிருப்பி

னும், அதை மறைத்துக்கொண்டு குலாவுகிறார்கள்! அவன் வாழ்வதைப் பார்க்கிறேனென்று கண்டபடி தூஷிக்கிறவர்கள் அவன் கண் முன்பாக எவ்வளவோ சாதுக்களாய்ப் பல்லிளித்து நடிக்கிறார்கள்! உயர்ந்தோர் எனப்படுவோர் அநேகர் நடையில் தாழ்ந்தவர்களாயிருக்கிறார்கள்! தாழ்ந்த ஜாதியிலும், தாழ்ந்த நிலைமையிலும் இருப்போருக்குள் உயர்ந்த நடையும் குணமுமுள்ளோர் அநேகரென்படுகிறார்கள்! தக்க பொருள் வாய்த்துச் செல்வர்களாயிருப்பவர்கள் அதைச் செலவிட நல்வழி தெரியாமல் குடித்து வெறித்துக் கூத்திமார்கள் துணையோடும் அலைகிறார்கள்! அல்லது அதிகக் கடன் பாரத்தைத் தமது சொத்துகளின் மீது ஏற்றிவைக்கிறார்கள்! பொருளை உத்தம வழியில் பிரயோஜனப்படுத்தும் வகையும், அதற்கு வேண்டிய அறிவும் அனுபவமுமுள்ளவர்கள் பொருளின்றி வருந்துகின்றார்கள்! நன்குகற்றுத் தேர்ந்த அறிவுள்ளோரிற் பலர் ஈவு இரக்கமற்றவர்களாயிருக்கிறார்கள்! தந்திரசாலிகளாயிருக்கிற சிலர் தேசபக்தர் என்கிற பெயரையும், ஜனத்தலைவர் என்கிற கௌரவத்தையும் வெகு சுலபத்தில் பெற்றுவிடுகிறார்கள்! கற்பு, கல்வி, அறிவு முதலியவைகள் நன்கே யமையப்பெற்ற பெண்ணரசிகள் கொலை பாதகர்களின் கைக்குட்பட்டு வேடன் கைமான்போல் மயங்குகின்றனர்! பிடாரிபோல் தலைவிரித்தாடிப் பேய்போல் ஓலமிடும் பெண்களின் கையில் அகப்பட்டுக்கொண்டு, அநேக உத்தமர்களும் யோக்கியர்களும் ஐயோ! ஐயோ! எனக்குப் போகக்காலம் வரவில்லையேயென அலறுகிறார்கள்! உத்தமர்களாகிய தகப்பன்மார்களுக்குக் கபடமும், சோம்பலும், நன்றியற்ற தன்மையும் நிறைந்த நீசப்பிள்ளைகள் பிறந்து, தம் தகப்பனாருடைய நற்பெயரையும் கீர்த்தியையும் கெடுத்துப் பஞ்சமாபாதகம் செய்யப் புறப்படுகிறார்கள்! நல்ல சற்புத்திரர்கள் அறிவில்லாப் பெற்றோர் வயிற்றிலுதித்துப் பெரிதும் வருந்துகின்றார்கள்! ஒரு குடும்பத்திலாவது ஒற்றுமையைக் காணவில்லை! ஸ்திரீபுருஷர்கள் ஒத்து வாழ்ந்தாலும் அந்தக் குடும்பங்களை வறுமைபிடித்து வாட்டுகிறது! உலகத்தில் மனிதன்போலவும், செய்கையிலும் குணத்திலும் மிருகம்போலவும் இருக்கிற ஜனங்களே எங்கு பார்த்தாலும் பெருத்துவிட்டார்கள்! உண்மைக்கும் பொய்க்கும் பேதமேயில்லாது போய்விட்டது! பொய் சொல்லியும், ஜாலம் செய்தும், முகமன் கூறியும், அன்பற்ற இடத்தில் கும்பிடு ஸலாம் போட்டும் பிழைக்க வேண்டி யிருக்கிறது! சிலர் நன்றாக உபசரித்துவிட்டு உள்ளுக்குள் எப்போது தொலைவானோ என்று சாபமிட்டு அருவருக்கிறார்கள்! அப்படிப் பட்டவர்களின் வீட்டை எப்படி நாடிப் போகிறது? ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு அக்கிரமச் செய்கையிருக்கிறது! அதையும் பார்த்துக் கொண்டுதான் அந்தந்த வீடுகளில் கசப்போடும் தங்கவேண்டியிருக்கிறது! மனிதனாகப் பிறந்துவிட்டு வேண்டிய கல்வியும் கற்றுவிட்டு படிப்பறியாத ஆடுமாடுகளோடு வாழவும் வேண்டியிருக்கிறது! நண்பர்கள் என்போரிற் பலர் நம்மிடத்திலிருந்து பறிப்பவர்களாயும் இலவசத்தில் நக்கி வேலை வாங்கிக்கொள்கிறவர்களாயும் இருக்கிறார்கள்! அந்தோ! உலகம்

---

ஒன்றைச் செய்யுமுன் அதனால் ஏற்படும் பலாபலன் என்னவென்பதைச் சிலர் தீர்க்கதிருஷ்டியுடன் யோசித்துப் பார்ப்பதில்லை. அவசரப்பட்டுச் செய்துவிட்டுப் பிறகு அங்கலாய்க்கிறார்கள்.

என்பது இதுதானு? இந்த உலகத்தை விட்டு நீங்கி வேறு எங்கேயாவது போய்விட வழியில்லையா? இவ்வுலகத்தில் நடக்கும் அநீதிகளையும் அக்கிரமங்களையும் பார்த்து எப்படித்தான் பொறுக்கிறதோ? இவ்வுலகம் பெரிது பெரிது என்கிறார்களே தவிர, உற்று நோக்கிடில் இதுவோ ரொம்பவும் சிறியதாயும், வெகு அற்பத்தன்மையாயும்,ஏமாற்றிப் பறிக்கிறதாயும் இருக்கிறதே! இதைத்தானே எல்லோரும் விரும்புகிறார்கள்! இறந்துபோகப் பயப்படுவதெல்லாம் இவ்வுலகத்தின் மேற்கொண்ட ஆசையால்லவா? இந்த உலகில் சுகம் என்பதுண்டா? அப்படி ஒன்றையும் காணோமே! எல்லோரும் தம் பாட்டைப் பார்க்கிறார்களே யன்றிப் பரோபகாரசிந்தையுள்ள ஒரு சிறுகுஞ்சைக்கூடக் காணோமே! அகப்பட்டதைச் சுருட்டிக்கொண்டு போக ஆட்கள் இருக்கிறார்களே தவிர, கொடுப்பவர்களைக் காணோமே! இவற்றை யெல்லாம் நீள நினைத்துப் பார்த்தால்—இந்தக் கள்ளம், கபடு, மேடு, சாக்கடை—கசுமாலங்களை யெல்லாம் உற்று நோக்கினல்—உலகம் கசக்கிறதா? தித்திக்கிறதா?

ஃ

விகடன் அறிவாளியான ஒரு சிறுகுஞ்சை விசாரித்தேன். அந்தப்பிஞ்சு சொன்னதாவது:—“ஓ விகட தாத்தாவே! நான் சோழநாட்டிலே புராதனமான பட்டண மொன்றில் பிறந்து வளர்ந்த ஓர் இளைஞன். என் இளமைப் பருவமுதல் வறுமை யென்னும் கடலின் அலைகளாற் பல்வேறு துறைகளில் மோதப்பட்டேன். படினும், என் அறிவு என்றும் ஓடத்தையே துணையாகக்கொண்டு, ஒரு வழியில் என் உலக வாழ்க்கைக்குப் போதிய கல்வியைப் பெற்றேன். ஆங்கிலம், தமிழ் முதலிய சிற்சில பாஷைகளில் கூடியவரைதேர்ச்சியும் அடைந்தேன்; அடைந்ததும் பயன் ஒன்றுமில்லை. பல நாள் வரையில் எனக்கு வேலையே கிடைக்கவில்லை. பிறகு இரண்டொரு இடங்களில் அமர்ந்து எவ்வளவோ உழைத்தும் கடுகத்தனை விசுவாசமேனும், நன்றியுணர்ச்சியேனும் காணப்பெறவில்லை. ஏதோ “உழைத்த மட்டில் கூலி” என்ற அவ்வளவோடு முடிந்தது. பல வகையிலும் வஞ்சிக்கப் பட்டேன். எங்கும் அவரவர் தம் காரியத்தைப் பார்க்கிற தந்திரமாகவே தோன்றிற்று.

“அலகிலா மானிடர்
யாவரு மவரவர்
நலமே யாண்டு நாடுவர்”

என்பதாய் முடிந்தது. உலக முழுதும் எனக்குக் கசப்பாய் ஒரு விஷம் போலத் தென்படுகிறதே யன்றிச் சிறிதும் மனோகரமா யிருக்கவில்லை.”

ஃ

இவ்விதமே யாரைக்கேட்டாலும் ஒவ்வொருவரும் உலகம் கசப்பதாகவே கருதுகிறார்கள்; கதறுகிறார்கள்! இன்னும் கலியாணமாகவில்லையே என்று இவனுக்குக் கசப்பு; கல்யாணமானவனைக் கேட்டாலோ, ஏண்டா அப்பா, கல்யாணம் பண்ணிக்கொண்டோம்; ஓயா விருந்தும் கடனுமாச்சே; நித்தமும் வீட்டில் கலகமாய்ப் பெண்டு பிடித்த பேயனனேனே யென்று அவனுக்குக் கசப்பு! அதிகச் சம்பளக்காரனுக்கு சம்பளம் தன் செலவுக்குப் போதவில்லை யென்று கசப்பு! சின்ன சம்பளக்காரனுக்குத் தன் சம்பளம் உயரவில்லை

---

ஆவலோடும் ஒரு புஸ்தகத்தைத் தனது நண்பனுக்குக் காட்டப்போக, அவனே அதை மெதுவாய்க் கொண்டுபோய் விடுகிறானும்!

யென்று கசப்பு! வேலையே கிடைக்காதவனுக்கோ ஒரு காசு கிடைத்தாலும் போதுமே, அதுவும் இல்லையே யென்று கசப்பு! குழந்தை யில்லாதவனுக்கு இவ்வளவு சொத்திருந்து என்ன பயன் என்று கசப்பு! குழந்தை குட்டிகளுள்ளவனுக்கோ என்டா அப்பா! கடவுள் இத்தனை குழந்தைகளைக் கொடுத்தார்; செலவுக்கு வழியில்லையே என்று கசப்பு! புருஷனை இழந்தவளுக்கு மஞ்சள் குங்குமமாய் நிற்கிறவளைப் பார்த்துக் கசப்பு! கணவனோடு வாழுகிறவளுக்கோ, இதென்ன பெரிய சம்சாரத்தொல்லை யென்று கசப்பு! விருந்தாளிக்குப் பதார்த்தங்கள் வாய்க்கு நல்ல ருசியாயில்லை யென்று கசப்பு! அவனுக்கு ஏமாந்து விருந்து செய்கிறவனுக்கோ இதென்ன தண்டச் செலவு என்று கசப்பு! வீட்டுக்காரனுக்குத் தான் பாங்கியில் போட்ட பணம் இன்னும் ஆயிரத்தின் கணக்குக்கு வரவில்லையே என்று கசப்பு! வீட்டு ராணிக்கோ நகைகள் செய்யாமல் வந்த பணத்தையெல்லாம் பாங்கியில் போடுகிறாரே யென்று கசப்பு! தான் அழைத்ததற்கு அவன் வராமல் முரட்டுத்தனம் செய்தானே என்று இவனுக்குக் கசப்பு! சும்மா சும்மா நல்ல நித்திலரயில் தொந்திரவு செய்கிறாரே என்று அவளுக்குக்கசப்பு! ஆ! புருஷ சுகம்—இல்லாமற் போச்சுதே என்று இன்னொருத்திக்குக் கசப்பு! வீட்டுக்கு மருமகள் என்று ஒருத்தி வந்து விளக்குவைத்து இன்னும் வாழவில்லையே; இன்னும் என் மகனுக்கு விவாக நான் காணோமேஎன்று ஒரு பெண்ணுக்குக் கசப்பு! மருமகள் வந்ததும் போதும், மகன் கெட்டதும் போதும், எப்போது இந்தச் சிறுக்கி தொலைவாளோ?-ஊருக்கு வருகிற வார்த்திபேதி இவளுக்கு வாராதா என்று வேறொரு பெண்ணுக்குக் கசப்பு! அவன் வாழுகிற வாழ்விலே இவனுக்குக் கசப்பு! இவன் வாழுகிற வாழ்விலே அவனுக்குக் கசப்பு! இப்படியாக எங்கெங்குமே எப்படியெப்படியோ கசப்பும்—குறையும்—புலம்பலும்—தவிப்புமாகவே நெடுகப் போகிறதடா அப்பா!

ஃ

சரி! சரி! உலகமே கசப்பாயிருக்கும்போது என்டா அப்பா இந்த உலகத்திலிருக்கவேணும் என்று விகடன் கேட்கிறேன்! இன்னும் மரணம்—சாவு வரவில்லையே என்று சிலர் பதில் சொல்லலாம்! தூக்கிட்டுக்கொண்டால்—துப்பாக்கியால் சுட்டுக்கொண்டால்—குளம், கிணறு, ஆறு, கடலில் விழுந்தால்—கிரோஷின் எண்ணெயை ஊற்றிக் கொளுத்திக்கொண்டால்—கத்தி எடுத்துக் கழுத்து வயிறை அறுத்துக்கொண்டால்—உடனே சாவு-மரணம்—கைலாசம்—வைகுண்டம்—மோட்சம்—கைமேலே அப்போதே கிடைத்து விடுமே! இதில் சந்தேகமிருந்தால் செய்து பார்த்துத் தெரிந்து கொள்கிறது தானே! இப்படி ஹாயியாய்த் தீர்ந்துபோகிற சுலப வழியிருக்க, ஏன் உயிரை வைத்துக்கொண்டு கசப்பு என்று தெரிந்திருந்தும் கசப்பிலேயே வாழ வேண்டுமோ என்று விகடன் கேட்கிறேன்! இங்கு தான் ஐயனே! பெரிய இரகசியம் ஒன்று உள்ளே மறைந்திருக்கிறது! கசப்பு கசப்பு என்கிறார்களே தவிர, உலகம் கசக்கிறது என்று ஓலமிடுகிறார்களே

பிறாது வீடுகளில் வேலைசெய்யும் பெண்களுக்கு அவர்களின் அழகு ஒரு சத்துரு. வீட்டுப் பெண்களிடம் மட்டும் பேசியபடி அவ்வளவில் ஒதுங்கி ஜாக்கிரதைப்படவேண்டும். வீட்டுப் புருஷர்களிடமும், வாலிபர்களிடமும் பேச்சுக்கொடுப்பது பின்னுக்கு மிக்க தீங்கை விளைவிக்கும்.

தவிர, அந்தக் கசப்பின் பக்கத்திலேயே மற்றொரு தித்திப்பும் பாவக்காயின் ருசிபோல் இருப்பதால், அந்தத் தித்திப்புக்காக இந்தக் கசப்பையும் உலகத்தார் சமாளித்துத் தாங்குகிறார்கள்! முதல் மனைவி கண் மூடி இப்போது இரண்டாவது விவாகத்திற்குத் தயாராய்விட்ட புது மாப்பிள்ளையைப் போய்ப்பாரு! இனி வருகிற சண்ணுட்டிமேலே ஆசை மோகம் மிகுந்துபோய் முதல் மனைவி மடிந்த கசப்பை மறந்து விடுகிறான்! தங்கள் குழந்தைகளை நினைத்துக்கொண்டு அந்தத் தித்திப்பில் கணவனை இழந்த கசப்பைப் பெண்கள் மறந்து போகிறார்கள்! முழுச் சொத்துகளும் தன் ஒருவனுக்கே கிடைக்க வேண்டியிருக்க, தன் அப்பன் பின்னும் பின்னும் பல குட்டி குழந்தைகளைப் பொத்து பொத்து என்று போட்டுவிட்டதில், அவர்களுக்கெல்லாம் பங்கிட வேண்டியதாகித் தனக்கு நாலில் ஒரு பங்கு சொத்தே கிடைத்ததென்கிற கசப்பைத் தனக்குத் தம்பிமார்கள் உண்டாய் விட்டார்களென்ற ஒற்றுமையின் பூரிப்பிலே நினைக்காது போகிறான்! பட்டித்தனமாயுள்ள தன் மனைவியோடு வாழும் கசப்பை, அவள் இருந்தால்தான் தன் குழந்தைகளுக்கு ஒரு நல்ல ஆதரவு என்கிற பெரிய எண்ணத்தில் மறந்து விடுகிறான்! இவ்வளவாவது கிடைத்ததே என்கிற மனோதிருப்தியிலே, அதிகம் கிடைக்கவில்லையே என்கிற கசப்பை மெதுவாக நழுவ விட்டு விடுகிறான்! ஒன்று காணுமற்போனதின் கசப்பை —அது போனுற் போகிறதென்று சமாதானம் செய்து கொள்வதில் மறக்கிறான். அதிகக் கடன் பட்டுத் தத்தளிக்கும் கசப்பைச் சீக்கிரத்திலேயே கடன்களை யெல்லாம் தீர்த்து சமாளித்துவிடலாமென்கிற தைரியத் தித்திப்பிலே மறந்து விடுகிறார்கள்! எப்படியாவது தங்களுக்கு சொத்து சேரும், புதிய அதிர்ஷ்டம் வரும் என்கிற எண்ணத்திலே, இப்போது படுகிற வறுமையின் கசப்பை எண்ணுது போகிறார்கள்! எவளையாவது ஒருத்தியை உபநாயகியாகக் கொண்டுவிடுகிறதென்கிற நினைப்பிலே—தனக்குக் கல்யாணமாகமாட்டாத கசப்பைத் தூரத்தள்ளி விடுகிறார்கள்! வயதாய் விட்டதே என்கிற கசப்பை இன்னும் வேண்டிய ஆயுள் இருக்கிறது என்று எண்ணமிடுகிற தித்திப்பில் மறந்து விடுகிறார்கள்! பிள்ளையில்லை யென்கிற கசப்பை ஸ்வீகாரமாக ஒரு குழந்தையை எடுத்துக் கொள்ளுகிற தித்திப்பில் மறந்து விடுகிறார்கள். இன்னும் சம்பளம் உயருமென்கிற நினைப்பிலே குறைந்த சம்பளமென்கிற கசப்பை மறந்து விடுகிறார்கள்! வீட்டை விற்றவன் தன் கைநிறையப் பணம் வந்ததே என்கிற சந்தோஷத்தில்—தன் சொந்த வீடு போய் விட்டதே என்கிற கசப்பை எண்ணுவதில்லை! வீட்டை வாங்கியவனே தனக்குப் புது வீடு கிடைத்ததென்ற பூரிப்பிலே தன்பணம் தீர்ந்து போனதை ஒரு கசப்பாக நினைப்பதில்லை. ஒருவனின் மனைவி இறந்து அதற்காகப் புலம்புகிற அப்பொழுதே, இனி எந்தப் பெண்ணை அவனுக்குக் கட்டி வைக்கலாம் என்கிற பேச்சும் தொடங்கிக் கொள்கிறது! வியாதி குணப்படும் என்கிற நம்பிக்கையிலே மருந்தின் கசப்பை ஒரு கசப்பாக யோசிப்பதில்லை! எல்லாம் தன் வீட்டுக்கே, தன்னவர்களுக்கே செலவாகிறதென்ற திருப்தியிலே அந்த மாதச் சம்பளம் முழுதும் தீர்ந்து விடுவதை ஒரு கசப்பாகப் பாவிப்பதில்லை! தன்

---

எங்கும் அன்பையே கொண்டு தன்னைப்பற்றி ஒருபொழுதும் கவலைப்பட்டு நினைக்காதவனுக்குப் பயமேது ?—துக்கமேது ?—ஸஞ்சலந்தானேது ?

பிரியகுமார்த்திக்குத்தானே நகைகள் போடுகிறேமென்ற நினைப்பில் இன்னெருவர் வீட்டுக்குச் சொத்து சேர்க்கிறேமேயென்று எண்ணுது போகிருர்கள்! இவ்விதமே ஒவ்வொரு கசப்புக்கும் ஒவ்வொரு சமாதானமும் திருப்தியும் செய்துகொண்டு, அந்தக் கசப்பின் பக்கத்திலேயே ஒரு தித்திப்பின் ருசிகாத்தை யனுபவித்தபடி சமாளித்துக்கொண்டு விடுகிறுர்கள்! எவ்வளவு கசப்பாயிருந்தாலும் அதிலும் ஒரு தித்திப்பான ஆசையைத் தோன்ற வைத்துக்கொண்டு உலகத்தில் உயிரோடும் வாழவே பார்க்கிருர்கள்! எவரும் செத்துப்போவதற்கு ஒருநாளும் விரும்புவதேயில்லை. இதைத்தான் உலகமாயை என்று வேதாந்திகள் வெகு வெகு நீளமாய்ச் சொல்லுவது! ஆகவே, இப்படியேயெல்லாம் இருப்பதாலே—கடைசியாக விகடன் மறுபடியும்—உலகம் கசக்கிறதா?—தித்திக்கிறதா?—என்று கேட்கிறேன்! என் நஞ்சான் குஞ்சான்களே! பதில் சொல்லுங்கள்! ராம்! ராம்! சுபம்! சு!! சுவாஹா!!!



## எலிமேண்டரி பாடசாலைகள்.

குழந்தைகளின் வகுப்பு முதல் நான்காம் வகுப்பு வரையில் கொண்ட இந்தப் பாடசாலைகளிற் சில வெகு மோசமாயிருக்கின்றன. நான்கு வகுப்புகளுக்கு இரண்டே உபாத்தியாயர் இருந்துகொண்டு பாடங்களை நடத்துகிருர். குழந்தைகள் வெறுமனே உட்கார்ந்திருப்பதைத் தவிர்த்துக் கல்வி பயில்வதைக் காணேம். தக்கபடி போதிக்கத் தெரியாவிடினும் குழந்தைகளை யடிப்பதில் குறைவில்லை. பிழைப்பதற்கு வேறு தொழிலற்றவர்களெல்லாம் இதில்வந்து நுழைந்துகொள்ளுகிருர்கள். எந்தப் பாடமும் சரிவரக் கற்பிக்கப்படுவதில்லை. ஒரு பாடத்திலாவது வினுவிடை கேட்பதுமில்லை. பதங்கட்கு அர்த்தம் சொல்லித் தருவதுமில்லை. கூச்சல் போடாமல் குழந்தைகளை உட்கார வைத்திருப்பதே உபாத்தியாயர்களின் தொழில். குழந்தைகளையைப் புடைத்துவிட்டு அதன்பின் பெற்றேர்கள் வந்து கேட்கவரின் கண்டபடி மரியாதையற்றுப் பேசிக் கேவலமாய் நடந்துகொள்ளுகிருர்கள். குழந்தைகளின் விலையுயர்ந்த அருமையான காலம் இங்கு வியர்த்தமாய்க் கொலை செய்யப்படுகின்றது; பாழாகின்றது. பழய நாளில் இப்படியில்லை. இதை மேலதிகாரிகள் கவனிக்கவேண்டும்.

பொறுப்பும் சொந்த அனுபவமும் வாய்ந்தவர்கள் பிறர் எவ்வளவுதான் கூறினும்கூட, தங்களின் சொந்த ஆலோசனையுடன் கலந்து யோசித்துப் பார்த்தே எதுவும் பேசுவர்—செய்வர்.




அவன் கேட்காதிருக்கையில் அந்தப் புஸ்தகத்தை என் வலியக் கொண்டுபோய்த்தந்து அதை வீணில் இழக்கவேண்டுமென்று அதைத்தனது சொந்த சொத்தாக்கிக்கொள்ள நினைக்கும் இரவல்பெற்ற புஸ்தகக்காரர்களுக்கு விகடன் '' பகதூர் விழுங்கி '' என்ற பட்டம் கொடுத்தானும்!

ஃ

விபசாரத் தடுப்புச் சட்டத்தின்படி சென்னையிலுள்ள விபசார விடுதிகள் ஒழிந்துபோனாலும், எங்கள் விபசாரத்திற்கு அழிவு கிடையாதென்று நாடக நங்கையர்களும், பணம் பெருத்த பாலாமணிகளும் பந்தயம் போடுகிறார்களாம்!

ஃ

அவள் வேண்டாம், இவள் வேண்டாம் என்று ஒவ்வொரு பெண்ணுக்கும் குறை சொல்லுகிறவன் கடைசியில் பல்லுபோனவளையும், காது மூக்குபோனவளையுந்தான் கண்ணாட்டியாகக் கல்யாணம் செய்துகொள்வானும்! ஃ

நாலு நாளைக்குச் சொத்து சுதந்திரம் பெற்று ஐந்தாம் நாள் அதை விட்டோடுகிற அற்பக் கட்டைகள் தான் அதிகமாகத் துள்ளிவிழுவார்களாம்! ஃ

சாமி கும்பிடுவதற்காக இல்லாமற் போனாலும், வியாபாரங்கள் நடப்பதற்காகவாவது ஒரு கோயிலும் குளமும் அடிக்கடி திருவிழாவும் வேண்டுமாம்!

ஃ

சம்பளம் என்பதாய் ஒன்று ஏற்படாவிட்டாலுங்கூட உயரிய பதவிகளில் தக்க மேல்வருமானங்கள் வேண்டியவரை கிடைக்குமாம்!

ஃ

தனக்கு இஷ்டமில்லாததை மற்றவருக்கு இஷ்டமில்லாததுபோலச் சொல்லித் தப்பித்துக்கொள்ள வேண்டுமாம்! ஃ

பிறர் கையிலிருந்து தன்குடுமியை விடுவித்துக்கொண்டவனைப் பிறகு எட்டிப்பிடிக்க முடியாதாம்! அவனுக்கு மூணுகொம்பு உடனே முளைத்துவிடுமாம்! ஃ

சில உத்தியோகஸ்தர்களுக்குத் தங்கள் வீடுகளிலேயே கனத்த வரும்படிகள் கிடைக்குமாம்! அவர்களின் வீடுகளைத் தேடிவந்து ரூபாய்களைக் கொட்டித் தங்கள் காரியத்தைச் சுலபப்படுத்திக்கொண்டு போகிறவர்கள் அநேகராம்! ஃ

எஜமான் நாலு ரூபாய் லஞ்சம் வாங்கும்பொழுது, அவருடைய சேவகன் நாலணு வாங்குவது குற்றமல்லவாம்! ஃ

மனஸ்தாபத்தால் சிலர் விலகி வீடு தேடி வாராவிடில், அவர்களுக்கு இடுகிற விருந்துச் செலவுகள் லாபமாம்!

ஃ

தன் மாமி ஏழையாக இருந்திருந்தால் தனக்கு இணங்கிப்போய் வெகு நல்ல மாமியாக ஆகியிருக்கக்கூடுமென்று ஒரு மருமகள் கூறுகிறாள்!

ஃ

வழக்கு ஜெயித்த பிறகு வக்கீலையும், வியாதி தீர்ந்த பிறகு வைத்தியரையும், விவாகம் ஆனபிறகு அதற்குத் துணையிருந்து உதவினோரையும் மறந்துபோக வேண்டுமாம்! அப்போதுதான் தொல்லையில்லாமலிருக்குமாம்! ஃ

வீட்டுப் பெண்கள் சோம்பேரிகளாய்விட்டபடியால்தான் சியக்காய்ப் பொடியும், மிளகாய், மஞ்சள் பொடிகளும் கடைகளுக்கு வந்திருக்கின்றனவாம்! ஃ

நெருப்பு பிடிக்காமல் சொத்துக்கள் அதிக பத்திரமாயிருப்பதற்குக் கூரைவீடுகள்தான் மிக நல்லதாம்!




## கல்லடைப்புக்குச் சுலப சிகிச்சை.

அமிர்த குணபோதினி ஆசிரியாவர்களுக்கு,





இது விஷயமாய்ப் பத்திராசிரியரவர்களின் குறிப்புக்காக எனது நன்றியறிதலைச் செலுத்துகிறேன். இவைதைக் கண்ட க்ஷணம் தீர விசாரித்தறிய கல்லடைப்பு வியாதியினின்றும் சொஸ்தமடைந்த பர்மிய சிநேகிதரை நேரேபோய் வீட்டில் சந்தித்தேன்.

விசாரித்தறிந்ததில் தாம் ஞாபகப்பிசகாய் (Nitre or Saltbetre) வெடியுப்பு, எவட்சாரம் இதற்குப் பிரதியாக (Sulphur) கந்தகம் என்று கூறிவிட்டனராம். இந்தத் தவறுதலுக்காக வருந்துகிறேன்.

### பானஞ் செய்யும் விதம்.

1 டம்ளர் (1 pint) ஜலத்தில் எலுமிச்சம்பழரசமும், சீனியும் சேர்த்து மேற்படி (Nitre) எவட்சாரத்தை (1 டிக்கல்) பொடி செய்து அதிற் கலக்கி ஷர்பத் செய்து அரைமணி நேரத்துக்குப்பின் பானஞ்செய்யவேண்டும். அநுபோகத்தில் கண்ட அவிழ்தமாகையினால் இக்கொடிய வியாதியால் பீடிக்கப்பட்டிருப்பவர்கள் பானஞ்செய்து சாப்பிட்டு கடவுளின் கிருபாநோக்கத்தால் பிரயோஜனமடையவேண்டுமென்பதே எனது உறுதியான நம்பிக்கை. பர்மிய சிநேகிதர் காண்பித்த வெளிப்பட்ட கல்லின் அளவு ▭.

T. V. சாமுவேல், மோல்மேண்.

[இதைக்குறித்தும் வைத்தியர்களிடம் ஆலோசித்துச் செய்வதே உத்தமம். இவ்விதம் செய்யலாமா வென்பதைக்குறித்தும், வேறுவித சிகிச்சைகளைக் குறித்தும் வைத்திய பண்டிதர்கள் தங்களின் அபிப்பிராயங்களை லோகோபகாரமாய்த் தெரிவிப்பின் அவற்றையும் பிரசுரிப்போம். ப-ர்.]

---

இப்பொழுது இருந்துவருவதுபோன்ற அவ்வளவு அதிகமான கசப்பு எந்தக் காலத்திலும் இருந்ததில்லையென்று சொல்லும்வண்ணமாக—மருமகள் மீதுள்ள துவேஷத்தால் ஈன்ற அன்னை தன் குமாரனை எல்லை கடந்து துவேசித்துத் தூற்றுகிறாள். இதனால் குடும்ப கௌரவம் நடுத்தெருவுக்கு வந்துவிடுகிறது.

---

"மனோன்மணீயம்" ஓர் அரிய நூல். அதற்குச் சமமான நூல் தமிழில் வேறு இல்லை. அதைப்படியாத தமிழன் அபாக்கியனே.

# இருவகைக் கௌரவங்கள்.



உத்தியோகத்திலமர்ந்தோ வியாபாரத்திற் பிரவேசித்தோ படிப்படியாய் உயர்ந்து விசேஷித்த செல்வம் தேடிக் கௌரவமாய் வாழ்தல் ஒருவிதம். இதில் சொற்ப வருமானமே கிடைப்பினுங்கூட, அது தானே உழைத்துத் தேடி உண்பதாதலின் அதற்கு உலகத்தாரின் மதிப்பு எப்போதுமுண்டு. எவ்வகையிலும் நாலு பணம் வீட்டிற்கு வருவதால் ஒருவித மேன்மையும் எற்படவே செய்கிறது. இனி, மற்றொன்றாவது; தந்தை எராளமாய்த் தேடிவைத்திருக்க, அந்தப் பெருமையில் மூழ்கி, நாமும் ஒருவனின் கீழ் உழைத்து வேலை செய்வதா என்ற சிந்தனையுடன் எந்த உத்தியோகத்திற்கும் பிரயத்தனிக்காமல் சுகமே வீட்டில் தங்கிக்கொண்டு உலக கௌரவத்தை வலிதிற் பெறுதற்காக முனிசிபல் கௌன்சிலர், சேர்மன், சம்பளமில்லாத மாஜிஸ்திரேட்டின் பதவி, சட்டசபை இவற்றில் புகுந்துகொள்ளக் கருதிப் பணத்தை எராளமாக வாரியிறைத்து அந்தப் பதவிகளையடைந்து ஆரவாரம் செய்தலாம். இதில் ஊருக்குப் பெரிய மனிதர் என்ற பெயரும் உண்டாகி விடுகின்றது. கவர்னர் வருகையின்போது அவருக்கு விருந்து செய்தல், அந்த இந்த பிரபல உத்தியோகஸ்தர்கள் தங்கள் ஊர்ப் பக்கம் வரின், அவர்களைத் தங்கள் வீட்டில் இறங்கும்படி வேண்டிக்கொண்டு அவர்களை உபசரிப்பதில் எராளமாகப் பணத்தைச் செலவிட்டு, அதில் தமக்கு ஒரு புது கௌரவம் எற்பட்டுவிட்டதாக நினைத்துப் பூரித்துக் கொள்வர்.

ஃ

இத்தகைய எமாறிய மனிதர்களைக்கொண்டு தங்களுக்கு வேண்டிய சௌகரியங்களைப் பெற்று நன்றாகப் புசித்துவிட்டு வந்தனங்கள் கூறிப் போய்விடுகிறார்கள். இவ்வாறெல்லாம் பணத்தை வாரி இறைத்துக் கௌரவங்கள் பெற்ற பின்பு சர்க்காரின் கௌரவப் பட்டங்களுக்காக ஆசை வைத்து அலைகிறார்கள். உத்தியோகஸ்தர்களைச் சந்தோஷப்படுத்துகிறார்கள். தோட்டக்கச்சேரிகள் நடத்துகிறார்கள். கௌரவப் பட்டங்களின் ஜாப்தா பத்திரிகைகளில் வரும்பொழுது வெகு ஆவலோடும் தங்களின் பெயர் அதில் இருக்கிறதா என்றும் பார்க்கிறார்கள். எதுங்காணாமைகண்டு பிறகு அங்கலாய்க்கிறார்கள். தப்பித் தவறி ஒரு சிறு கௌரவப்பட்டம் கிடைத்துவிடின், அதனினும் பெரிய கௌரவப்பட்டத்தைப் பெற அது முதல் பிரயத்தனித்து அதற்காக எராளமான செலவுகளும் செய்யமுற்படுகிறார்கள். இந்த வகையில் தந்தை தேடிவைத்த சொத்துக்கள் யாவும் பறந்து தாங்கமுடியாத கடனையும் சுமந்து கண்கலங்குவோர் எண்ணிலர். உழைத்து நாலுகாசு கொண்டுவாராது கௌரவம் தேடுகிற இந்த வழியைவிட, உழைத்து இரண்டு பணம் வீட்டிற்குக் கொண்டுவருகிற ஜீவியமே மேன்மையும் குடும்ப விருத்தியுமாகும். சம்பளம் பெறாத ஹானரெரி மாஜிஸ்திரேட்டைவிட சொற்ப சம்பளம் பெறும் சிறு மாஜிஸ்திரேட் பதவியே போற்றற்பாலது. உழைத்துச் செல்வம் தேடுவதிலுள்ள உயர்வு, உட்கார்ந்து சோம்பிப் பணம் கொடுத்து வாங்கும் கௌரவங்களி

ளுல் ஒருபோதும் ஏற்படமாட்டா. அதனுல் எந்தப் புதிய சொத்தும் சோராது. ஐசுவரிய விருத்தியுமில்லை. செத்தால் தெரியும் செட்டியார் வாழ்வு என்பது காசு, பணம்வராத போலி கௌரவங்களில் மயங்குகிற இத்தகையோரைப் பற்றியே வந்த பழமொழியாகவும் இருக்கலாம்.

## ஏன் நமது மனதில் அன்பு தோன்றுவதில்லை?

நம்மீது சிலர் அன்பு பாராட்டுகிருர்கள். அடிக்கடி நம்மிடம் வருகிருர்கள். நாமும் அவர்களிடம் அன்பாயிருப்பதாக நடிக்கிருேமேயன்றி அவர்களிடம் நாம் அன்பு பாராட்ட முடியவில்லை. வெளியுபசாரம் மட்டுமே செய்கிருேம். "வந்துவிட்டாரே—இதென்ன ஓயாத் தொல்லை" என்று நமக்குள் எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கொள்கிருேம். வெளிக்குமட்டில் நமது புன்சிரிப்பைத் தெரிவித்துக் குலாவுகிருேம். எப்போது இந்த மனுஷ்யர் எழுந்துபோவாரோ என்றும் எண்ணிவிடுகிருேம். அவருடன் பேசுவதையே ஒரு ஹிம்ஸையாக நினைக்கிருேம். அவர் புறப்பட்டதும், "அப்படா! போகிருரப்பா" என்று சந்தோஷத்துடன் வாயிற்படிவரை வந்து வெகு அன்பு உருக்கத்தோடும் வழியனுப்பிவிட்டு "சனியன் தொலைந்தது" என்று திருப்திபடுகிருேம். அன்பு என்பது எல்லோர்மீதிலுமே சென்றுவிடுவதல்லவாதலாலும், குறித்த சிலர்மீதே நாம் அன்பு செலுத்த முடிகிறதினுலும் இவ்வாறு நாம் நடக்க நேருகிறதேயன்றி, மற்றபடி கபடத்தால் நாம் இப்படிச் செய்யவில்லை. மேலும், ஒருவர் அன்புகாட்டி அடுத்த நிமிஷம் நமது பொருள் ஒன்றை இரவலாகக் கேட்டுப் பறித்துச் செல்லத் தொந்தரை செய்யும்போது—ஓ! தன் காரியத்திற்காகத்தான் நம்மீது இத்தனை அன்பு காட்டுவதாக நடித்தலோவென்று அவர்கள்மீது நாம் மிக்க அருவருப்பு கொண்டுவிடுவதாலும், அதன்காரணமாகவும் நாம் அங்கு அன்புகாட்ட முடியாமற் போய்விடுகிறது. உண்மையான அன்பு நம்மிடமுள்ள பொருள்களை யெல்லாம் தம்முடைய பொருள்களாக அன்புடையோரை நினைக்கவைக்குமேயன்றி அவற்றை இரவல்வகையில் பறித்துக்கொண்டு போகுமாறு எண்ணவைக்காது. ஒரு காரியத்திற்காக ஒருவரிடம் அன்பு காட்டுவது சுயநலமே தவிர உண்மையன்பாகாது. அத்தகைய இடத்தில் நமது மனமும் அன்புகொள்வதில்லை. தன்னையறியாமலே தோன்றும் அன்பே உண்மையன்பு.

# பத்திரிகை ஆராய்ச்சி.

## ஆங்கில உடை அவசியமா?



சிலர் தங்களுக்குப் புது உத்தியோக பதவிகள் கூடியதும் ஆங்கில உடை தரித்து பெரிய துரைகளாய்விடுகிறார்கள். அவ்விதம் அணிந்தால்தான் தங்களுக்கு மதிப்பு அதிகப்படுமென்று எண்ணுகிறார்கள். சுதேச உடை யணிந்துள்ள கௌரவம் ஆங்கில உடையிலில்லை யென்பதை அன்னோர் உணர்வதில்லை. 1900-வருஷத்தில் மாஜி இராஜப்பிரதிநிதியாகிய லார்ட் கர்ஸன் திருச்சிராப்பள்ளிக்கு விஜயம்செய்தபோது, புதுக்கோட்டை யரசர் ஆங்கில உடையுடன் பேட்டி பெறவந்தார். லார்ட் கர்ஸன் அவர் தமது பூர்வீக உடையுடன் வந்து காணுமாறு தெரிவித்து விட்டாரென்று நமக்கு ஞாபகம் இருக்கிறது. "லீடர்" பத்திரிகையில் ஆங்கில உடையைப்பற்றி ஸ்ரீமான் பி. கெ. பி. என்பவர் தமது அபிப்பிராயத்தை விவரித்திருக்கிறார். தான் பிறந்தநாள்முதல் ஆங்கில உடையின் மாதிரியாகவே உடுத்தி வந்திருப்பதாயும், மிகுந்த தீர்க்காலோசனைக்குப் பிறகே தமது உடையை இந்திய முறையாக மாற்றிக்கொண்டதாகவும் கூறுகின்றார். அவரது பின்வரும் குறிப்புகள் கவனிக்கத்தக்கவையாகும்.

ஃ

"ஆங்கில உடையினால் என்னுடைய உணர்ச்சியே மந்தித்துப் போய்விட்டது; அந்த ஆரவாரங்களில் நான் மயங்கிப் போய்விட்டேன். எனக்கு இறுமாப்பு ஏற்பட்டதுடன், நான்தான் உயர்ந்தவனென்றும் நினைத்துக்கொண்டு விட்டேன். இதனால் சுதேச உடையை அணிந்திருந்த எனது சகோதர இந்தியர்கள் காட்டுமிராண்டிகள் என்ற எண்ணமும் எனக்கு ஏற்பட்டுவிட்டது. அவர்களுடன் கலந்துகொள்ளுவதில் எனக்கு வெறுப்பு ஏற்பட்டுவிட்டது; அவர்களுடன் பேசவேண்டியிருந்தால் அவர்களுக்குப் பெரிய சர்வமான்யம் செய்வதாகவே நான் நினைத்துக்கொண்டு விட்டேன்.

ஃ

ஆங்கில தோரணையில் உடுத்தி வரும் இந்தியர்களுடைய மனதில் இவ்வித உணர்ச்சியே இருந்துவரக் கூடும். ஆங்கில உடையை உடுத்துவதன் பலனாக நாமும் அந்த தேசத்தினர் என்ற எண்ணம் ஏற்பட்டுவிடுகிறது. நம்முடைய அடிமைப்புத்தி காரணமாக ஆங்கில உடை முறையே சிறந்ததென்று சுதேசீயம் ஓங்கியிருக்கும் இக்காலத்திலும் நாம் நினைத்து விடுகிறோம்."

ஃ

"ஆங்கில உடையை யணிவதால் நாம் இன்னாரென்பதையே மறந்துவிடுகிறோம். அவ்விதம் மறந்து விடுவதையும் நாம் ஒரு பெருமையாகக் கருதுகிறோம். முடிவில் இந்தியமயமான யாவற்றிலும் நமக்கு வெறுப்பு ஏற்படுகிறது.***ஆங்கில உடைமுறையானது இந்தியாவின்

அன்பும், இரக்கமும், அழகும் உன்னை யலங்கரிக்கும்படி நில்.

ஆண்மைத்தனத்தைக் கெடுத்து, தனக்கு வீண் பெருமையை ஏற்படுத்திக்கொண்டுவிட்டது. பெரிய அதிகாரிகளுடைய அதிருப்தி ஏற்பட்டுவிடுமோவென்ற பயத்தினுல் நமது தேசிய உடையில் அவர்களிடம் செல்லவும் நாம் அஞ்சுகிறோம். காக்ஷிக்குப் பொம்மைகளை ஜோடிப்பதுபோல் சில சமயங்களில் நாம் அலங்காரம் செய்து கொள்ளுகிறோம். ***ஆங்கில வழியில் உடுத்திக்கொள்வதால் அங்கிலேயர்களிட முள்ள தீக்குணங்களையே நாம் கிரகித்துக் கொள்ளுகிறோம். அவர்களுடைய நற்குணங்களைக் கிரகித்துக்கொள்ளவில்லை. ஆகவே, நாம் பிறர் நகைப்புக்குப் பாத்திரர்களாகிறோம். நாம் அவர்களுடைய மதிப்பைப் பெறுவதில்லை; அவர்களின் கேலிக்கே நாம் ஆளாகிறோம்.*** நமது எஜமானர்கள் நம்மைக் கண்டு சுமுகத்தைக் காட்டாமலிருந்து விடுவார்களோவென்பதற்காகவே நாம் ஆங்கில நடையில் உடுத்திக்கொள்ளுகிறோம். இவ்விதம் உடுத்திக்கொள்வதானது மனப்பூர்வமான நம்பிக்கையின் மேல் அவ்விதம் செய்வதாகவுமில்லை. ஒரு ஸம்பிரதாயத்தை விட்டுவிடக் கூடாதென்பதற்காகவே நாம் அவ்விதம் செய்கிறோம். அதனுல், ஆங்கிலேயர்களின் உண்மையான பிரதிநிதியாக நாம் ஆகிவிடுவதில்லை; அவர்களுடைய சாயையாகவே நாம் ஆகிவிடுகிறோம்.” ஃ

“சவுகரியம், அழகு இவைகளை உத்தேசித்தும் இந்தியாவின் நிலைமையில் இந்தியமுறை தான் ஸெளக்கியமானதென்று எனக்குத் தோன்றுகிறது. உடையென்பது தேசத்தின் நிலைமையை ஒட்டி ஏற்பட்டுள்ள பழக்கம்; அது சம்பிரதாயத்தை ஒட்டிய டாம்பீகமில்லை. உடுத்திக்கொள்ளவேண்டுமென்பதற்காகவே நாம் உடுத்திக்கொள்ளுகிறோம்; ஆனுல் உடை விஷயத்தில் நமது எல்லையையும் மீறி நாம் போய் விடுகையில் நாம் டாம்பீகங்களிலிறங்கி விடுகிறோம். கால்சட்டை போட்டுக்கொள்வதைக் காட்டிலும் நமது சுதேச உடையானது நமக்கு அதிக அழகைக் கொடுக்கக்கூடியதாக இருக்கும்; நமது சரீரத்திற்கும் அது தான் எடுத்தது. இந்தியாவின் நிலைமையில் பிடிப்பான உடுப்புகளை விட தளர்ச்சியான ஆடைகளே சிறந்தவை. காரிய சவுகரியத்திற்காகவும் ஆங்கில பாணியில் உடுத்திக்கொள்ள வேண்டியது நமது தேசத்தில் அவசியமென்று நான் நினைக்கவில்லை. சம்பிரதாயத்தின் பலனுக அந்த எண்ணம் ஏற்பட்டு விட்டது. ஷார்ட்கோட் பொருத்தமானதாக இருந்தால், கழுத்தை மூடிய ஷார்ட் கோட்டை அணிந்து கொள்ளுவதில் ஆட்சேபத்திற்கு இடமில்லை. ஆனுல், குருட்டுத்தனமாக மேனுட்டினர் வழியை நாம் பின்பற்றிப் பழகிவிட்டதால் நியாயவாதம் நமது மூளையில் ஏறுவதில்லை. அது தான் காரணம். நமது தேச உடை முறையில் நாம் சுறுசுறுப்புள்ளவர்களாகக் காணப்பட முடியாவிடில், இரவல் உடுப்பினுல் அது ஏற்பட்டுவிட முடியாது. அதை அணிந்து கொள்ளுவதால் கௌரவம் ஏற்படும்படி செய்து கொள்ளுவதற்குப் பதிலாகப் பரிகாசத்திற்கே நாம் ஆளாகிறோம்.”

---

இந்துக்கள், தங்களது மதத்தை எக்காரணத்தாலாவது விட்டுப் பிறமதத்தை நாடியவர்களைப் பின்னர் ஒருகாலும் திரும்ப ஆதரிப்பதில்லை. இதனுல் தேசத்துக்கு எவ்வளவோ தீங்கு விளைகிறது. நாட்டிற்கு உழைக்கக்கூடிய மேதாவிகளையும், வீரர்களையும் இந்த மடமையால் இழக்கும்படி நேரிடுகிறது. நேரிட்டுமிருக்கிறது.




## 3. இல்லறம்.

(31-ம் பக்கத் தொடர்ச்சி.)

**253. "அரசனைக் கண்ட கண்ணுக்குப் புருஷனைக் கண்டால் கொசுப்போல இருக்கிறது."**

நற்பழக்கமில்லாத சில பெண்களுக்கு விபரீதவழியில் புத்தி பாய்கின்றது. கணவன் மீதுள்ள வாஞ்சையைக் குடும்பத்தைச் சேர்ந்த மற்றொருவர் மீது வைத்து விடுகிறார்கள். இத்தகைய ஸ்திரீகளுக்குத் தம் கணவன் என்றால் சற்றும் பிடிப்பதேயில்லை. அவன் எவ்வளவோ ஆதரித்து விஸ்வாசமாக நடந்து கொண்ட போதிலும் அவன் மீது உண்மையான அன்பே இல்லை. அவனிலும் எத்தனையோ மடங்கு தாழ்ந்தவனும் இழிந்தவனுமான ஒரு அற்பக் கட்டையின் மீதே கருத்து செல்கின்றது. அந்தத் திருட்டுக்கட்டை வீட்டிற்குப் புசிக்க வந்து விட்டால் ஒரு பிரத்தியேகமான வறுவலும் குழம்பும் காய் கறிகளும் ஒரு நிமிஷத்தில் தயார் செய்து விடுகிறாள். கணவனுக்காகவே அவற்றைச் செய்ததுபோல் நடிக்கிறாள். வீட்டிலிருக்கும் நகையோ, எதுவோ அவன் கையில் தூக்கிக் கொடுத்து விடுகிறாள். உண்மையில் உழைக்கிற கணவனைச் சற்றும் எண்ணிப் பார்ப்பதேயில்லை. இத்தகைய துஷ்டைகளைக் காலம்தான் திருத்தவேண்டும். இவர்களைக்கொண்டு நடைபெறும் இல்லறத்தின் அலங்கோலம் சொல்லத் தேவையில்லை.

**254. "அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்டது போல."**

வீட்டிற்குள் மானமாய் மரியாதையாய் ஒரு எல்லைக்குள்ளிருந்த பெண்கள் தமது அற்ப புத்தி காரணமாக வீட்டை விட்டு வெளிப்பட்டு விடுவதில், சோர நாயகனும் பிறகு கைவிட்டுவிட, வீட்டினரும் அவளைத்தள்ளி ஒதுக்கி விட, இரண்டுங்கெட்டு சந்தி சிரிக்கும்படியாய் விடுகிறது. இதற்கு உதாரணங்கள் வண்டி வண்டியாகக் கிடைக்கும்.

**255. "அரைக்காசுக்கு அழிந்த கற்பு ஆயிரம் பொன் கொடுத்தும் கிடையாது."**

பெண்கள் தங்களின் மானத்தைக் காத்து நிற்பதில் கொள்ளவேண்டிய சிரத்தையை இப்பழமொழி குறிப்பிடுகிறது. தமது பதிவிரதா தர்மத்தைக் காத்துக்கொள்வது மட்டுமல்ல; தம்மீது பிறர் இச்சைகொள்ளா வண்ணமும் மேலாடையை நன்கு திருத்தித் தரித்துக் கொள்ளவேண்டும். தங்களையும் காக்கவேண்டும்; மற்றவர் மனம் கெடாவாறு அவர்களையும் காப்பதற்கு எற்றபடி தாங்கள் நடந்து கொள்ளவேண்டும்.

256. "அரண்மனை காத்தவனும், அடுப்பங்கரை காத்தவனும் வீண் போவதில்லை."

ஒரு குடும்பத்தின் முக்கியஸ்தானம் சமையல் அறை. அந்த சமையலுக்கு வேண்டியவற்றைச் சேகரித்துக் கொடுத்துக் குடும்பத்தை ஸம்ரக்ஷிக்கும் தலைவனின் உழைப்பு ஒருபோதும் வீண்போவதில்லை. அவனுக்குக் குடும்பஸ்தன் என்ற கௌரவமும் உலக கௌரவமும் உண்டாகின்றது. வந்தவருக்குப் பசிதீர அன்னமிட்டுப் பலருக்கு உபகாரியுமாகின்றான்.

257. "அரிசி ஆழாக்கானாலும் அடுப்புக்கட்டி மூன்று வேண்டும்."

சொற்ப வருமானத்தில் ஜீவிக்கும் சிறு குடித்தனமாயிருந்த போதிலுங்கூட, அங்குமுறவினர்கள், நண்பர், அதிதிகள் வரவும் போகவுமாகவேயிருக்கலாமானதால், சிறு குடித்தனத்திலும் பெருஞ் செலவுகள் நேரிடக்கூடும். விவாகமாகி "குடும்பம்" என்று ஒன்று ஏற்பட்டால் அந்த பல தொந்தரைகளையும், விருந்துகளையும் சமாளித்துக் கொண்டுதான் போகவேண்டும். அரிசி கொஞ்சமாயிருந்தாலும், அதற்கும் மூன்று அடுப்பங்கட்டி வேண்டியிருப்பதுபோல, சிறு சம்சாரத்திலும் கஷ்டத்தோடு நிர்வகிக்கவேண்டிய பொறுப்புகள் அநேகம் உண்டு.

258. "அரிசி உண்டானால் வரிசையும் உண்டு, அக்காள் உண்டானால் மச்சானும் உண்டு."

வீட்டிற்கு வேண்டிய மற்ற சாமான்களை அரையணா—ஒரு அணாவில் வாங்கி விடலாம். ஆனால், அரிசியோ ஒரு முழு ரூபாய் கொடுத்தே பெற வேண்டிய சங்கதி. அரிசி ஆகிவிட்டதென்று மனைவி கூறுவாளாயின், அதற்குள் ஆகிவிட்டதா என்கிற வீட்டுக்காரனுடைய கேள்வியும் அத்துடன் புறப்பட்டுக் கொள்ளும். இப்பொழுது தானே ஒரு மூட்டை அரிசி வாங்கினேன் என்பான். தோசைக்கு—இட்டிலிக்குப் போடவில்லையா?—ஓயா விருந்துவரவில்லையா?—உங்களைச் சேர்ந்தவர்களெல்லாம் வந்து குந்திக்கொண்டு தின்னவில்லையா?—நானா எல்லாம் தின்றுவிட்டேன்? என்று மனைவி சங்கீதம் பாடுவாள். "என்னைச் சேர்ந்தவர்கள் மட்டும் தானா வந்தார்கள்?—உன்னைச் சேர்ந்தவர்கள் தான் அதிகம் வந்தார்கள்" என்பான். இவ்விதமாக ஒரு திகைப்பு திகைத்த பின்பு மறுபடியும் அரிசி வாங்குவதற்கு ஏற்பாடு நடக்கும். பல நாட்கள் வரை புசித்துக் கொண்டிருப்போர், வீட்டில் அரிசி ஆய்விட்டதெனில் மெதுவாகப் புறப்பட்டுச் சென்று விடுவதுமுண்டு. இவ்வாறான ஏக்கம் எதுவுமின்றி வீட்டில் அரிசி வேண்டியவரையும் இருந்துவிடில் அப்பொழுது எவ்வளவு விருந்துகள் வரினும் அது ஒரு பாரமாய்க் கவலையாய்ப் படாது. வந்தவர்களையும் பிரியமாய் உபசரிக்க வைக்கும். எத்தனை பேர்கள் வரினும் ஏற்றுக்கொள்ளவைக்கும். எனவே, அரிசி ஒரு வீட்டின் முக்கியமான பொருள். அது இருந்துவிட்டதானால் எல்லா விருந்து விமரிசைகளும் தானாகவே நடக்கும். அது எதுபோலெனில் அக்கா என்று ஒருத்தி இருப்பின் மச்சான் என்று ஒருவன் எவ்விதமும் ஏற்படுவது போல ஆகும் என்பது இப்பழமொழியின் கருத்து.

259. "அரிசிக்குத்தக்க உலையும், ஆமுடையானுக்குத் தக்க வீறுப்பும்."

எவ்வளவுக்கு ஒரு தினத்திற்கு அரிசி போடுகிறார்களோ அதற்குத் தக்கபடி பானையும், அதற்குத் தகுந்த காய் கறிகளும், குழம்பு, ரஸம், தயிர் முதலியவைகளும் அமையும். அதுபோலவே, தன் கணவன் சம்பாதிக்கும் அளவுக்குத் தக்கபடி மனைவியின் பெருமையும் இருக்கும். கணவன் சொற்ப சம்பளக்காரனா யிருப்பின் அதற் கேற்றபடி மனைவியும் இருப்பாள். கணவனுக்கு ஏராளமான சம்பாத்திய முண்டாயின் வீட்டு ராணியின் ஆரவாரமும் பெருமை முழக்கமும் அதற்குத் தக்கபடி இருக்கும். கணவனின் வாழ்வைப் பொறுத்து ஒரு பெண்ணுக்குச் சுகம் அமையும் என்றபடி.

260. "அரிசி பகையும், ஆமுடையான் பகையும் உண்டா?"

அரிசி, ஆமுடையான்—இவ்விரண்டும் இல்வாழ்க்கைக்குப் பிரதானமான சரக்கு. இவ்விரண்டினிடத்திலும் கோபமோ பகையோ கொள்வதாகில் தனக்கே தான் அனர்த்தம் ஏற்படும். அவ்விதம் கொள்வதும் நீடித்து நில்லாது கணவனுடன் ஒரு பெண் பகைப்பினும், மறு நிமிஷத்தில் சமாதானமாய்ப்போய் விடுவாள். அவ்விதம் சமரஸமாகி விடுவதே புத்திசாலித்தனம் என்பதை இப்பழமொழி விளக்குகின்றது. (தொடரும்.)

## சலியாதிரு என் ஏழை நெஞ்சே!

சென்றது கருதிச் சிந்தை நைவதிற் பயனென்னும்? போனது வருமோ?—திரும்புமோ?—மீண்டும் பெறுதலுங் கூடுமோ? அது ஏது இனி? இப்போது உதவியாகக் கிடைத்த இந்த இரண்டாவது மனைவியைக் கொண்டே உன் இல்வாழ்க்கையின்கடலைச் சரி சரியெனச் சமாளித்து நீந்திக் கொண்டுபோ. அவ்வளவு நோயிலும் பாயிலும் அவள் அருகினில் நெருங்கிக் கவனிக்கவில்லையே என்று அதிர்ப்தி படாதே. அதுசமயம் முதல் மனைவியை நினைவுகூர்ந்துக் கண்ணீர் பெருகாதே. அவள் இருந்தால் எவ்வளவு கவனிப்பாள்?—என்று ஆவி சோராதே. அதிகம் வாடாதே. எந்த இடத்தில் உனக்கு அதிருப்தி ஏற்படுகிறதோ அந்த இடத்தையே திருப்திக்கான இடமாக நினைத்துக்கொண்டு திருப்திபடப் பயின்று திருப்தியோடுந்தானே இருந்து கொள்ளப் பார். அவ்விதம் திருப்திபடப் பழகினால்தான் வாழ்க்கையில் சற்றேனும் இன்பச்சுவையை நீ காணலாம். எவ்வளவுக்கு உன் சகிப்போ அவ்வளவுக்குச் சுகிப்பு. நெஞ்சே! வீணாக விசாரப்படாதே. தைரியமாயிரு.

# ஜீவரத்தினம்.



சிலருக்குத் தான் எழுதிய வியாசம் மிகவும் அழகாயிருக்கிறதென்று பிறர் சொல்லவேண்டுமென்ற அவா. ஆனால், மற்றவர்கள் எவ்வளவுதான் அழகாய் எழுதியிருந்தாலும் அதில் ஏதாவதொரு குற்றம் கண்டுபிடிப்பர். ஃ

கடவுள் நமக்கு நன்மை தீமைகள் நடந்து வருவதை முன்னமேயே தெரியக்கூடாதென்று மறைத்து வைக்க, பலர் ஜோதிடம் முதலியவற்றால் அவைகளைத் தெரிந்து கொள்ள முயற்சிக்கின்றனர். இவர்கள் நூற்றுக்கு ஐந்து தடவைகள்கூட மெய்யாகச் சொல்லுவதில்லை. அப்படி மெய்யானாலும் அதனால் அவர்கள் அடையும் பயன்தான் என்ன? நன்மையானால் எப்பொழுது வருமென்று ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பதனால் அது குறைந்தே விடுகிறது. கெட்டதானால் அவ்விஷயத்தைக் கேட்டதுமுதல் ஒரே வருத்தமாயிருக்கிறது. ஆகையால் கடவுள் விட்ட வழியே நல்ல வழியென்றுணர்ந்து இனி வருகிறதை சந்தோஷமாய் வரவேற்று சுகம் பெறுக. ஃ

கடவுள் பொல்லாங்கிலிருந்து தான் நன்மையைப் பெறவைக்கிறார். ஒருவன் தோல்வியடைவது பிறகு பிரபலமான வெற்றியுடன் விளங்குவதற்காகும். புலி பின்னால் பதுங்குவது வெகு பலத்துடன் முன்னால் பாய்வதற்கேயாகும். பொல்லாங்கு நேர்ந்தாலும் ஆனந்தமாகவே இரு. ஃ

ஒரு நண்பனை வெகு காலமாகப் பாராமல் இருந்துவிட்டு முதல் தடவை காணும்பொழுது அவனிடம் பேசுவதற்கு வாய் வருவதே இல்லை. என்னென்னவோ சொல்ல நினைத்திருப்பினும் அவைகளெல்லாம் எவ்விதமோ மறைந்து விடுகிறது. நாக்கு தடுமாறுகிறது. ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டிருக்கத்தான் முடிகிறது. ஃ

தாயும் மகளும் ஒரே கக்ஷிக்கு ஒரே சமயத்தில் செல்வதைப்போன்று தந்தையும் தனயனும் செல்ல முடிகிறதில்லை. பெண்களுக்குக் கிடைப்பதைப்போன்று இவர்களுக்குச் சமாசாரமும் கிடைப்பதில்லை. இவர்களுக்கு அவர்களைப்போன்று அலங்கரித்துக்கொள்ளவும் நேர்வதில்லை. ஃ

சந்தோஷத்திலாவது அல்லது துக்கத்திலாவது முதலில் ருசித்ததைப் போன்று ஒரு அனுபவம் பிறகு ருசிப்பதில்லை. முதல் தடவை வாசித்தபொழுது அடைந்த ஆனந்தத்திற்குச் சமானமாகப் பிறகு உண்டாவதில்லை. சில புஸ்தகங்கள் மீண்டும் மீண்டும் வாசித்தாலும் புதிது புதிதாக ருசிப்பதைப்போன்று சில அனுபவங்களும் எத்தனை முறை அனுபவிப்பினும் புது விதமாகவே இருக்கும்.

ஜெ. சுந்தாரங்கன்,
"ஜெகந்நாத பாக்"

---

ஒருவனிடமிருந்து பிறகும் உதவிகளைத் தான் பெறவேண்டியிருக்கும்பொழுது அவனை அதிகமாகக் கசக்கிப் பிழிந்து கேவலப்படுத்திப் பேசுவது பின்னுக்குப் பெற நினைத்துள்ள உதவிகளுக்குப் பாதகமாக முடியலாம்.




# இராஜசந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.

### அத்தியாயம்—8.

### பொன்னுசாமியின் போக்கு.

(56-ம் பக்கத் தொடர்ச்சி.)

### IX.

கமலவல்லி :—அவர் உன்னை வீட்டைவிட்டுத் துரத்திவிட்டபடியால் நீ எங்கே புசிக்கிறாய் ?

பொன்னுசாமி :—நானா ? ஹோட்டலில் கிடைப்பதை வயிற்றில் கொட்டிக்கொண்டு, சத்திரத்தில் படுத்துக் காலம் தள்ளுகிறேன். என்னவோ என் தலைவிதி !

கமலவல்லி :—ஐயோ ! பாவம் ! இனி எங்கும் போகவேண்டாம். நான் உன்னுடைய பந்துவல்லவா ? நீ இந்த ஊரில் இருக்கும் வரையில் என்னுடைய வீட்டிலேயே இரு. நீ சற்றுவது திருந்தினால் நான் உன் தந்தையிடம் பேசிச் சரிசெய்யப் பார்க்கிறேன்.

ஃ

கமலவல்லியைப் போலவே கண்ணப்பனும் பொன்னுசாமியை சாரதா விலாஸத்திலேயே இருக்கும்படி கூறினான். அன்று முதல் பொன்னுசாமி கமலவல்லியின் ஆதரவில் பத்து தினங்கள் வரையில் இருந்தான். கண்ணப்பனோடும் உல்லாஸமாய்ப் பேசியிருக்க நினைத்தும், கடியாரத்தைப் பார்த்துக்கொண்டே வார்த்தையாடுகிற கண்ணப்பனின் போக்கு பொன்னுசாமிக்குப் பிடிக்கவில்லை. அனுவசியமான பேச்சுகளுக்குக் கண்ணப்பன் எப்பொழுதும் இடம் தருவதில்லையாதலால் அவனிடம் அதிகமாக நேசிக்க முடியவில்லை. அந்த வீட்டு வேலைக்காரிகளுள் யுவதிகள் எவரெவரென்று ஆராயத்தலைப்பட்டு, எவரேனும் தன் வலையில் சிக்கக் கூடுமாவென்று பொன்னுசாமி முயற்சி செய்தான். இவன் தீய ஸ்வபாவத்தைக்கண்டு எவரும் அஞ்சி விலகியதால் எதுவும் கைகூடவில்லை.

அங்கு இருந்த பத்துநாட்களிலும் கமலவல்லியின் மனம் கோணாது அவள் இஷ்டப்படியே பணிந்து நடந்து, தான் சீக்கிரத்தில் நல்வழிக்குத் திரும்பப்போவதுபோல் நடித்து வந்ததுமன்றி, சில சமயங்களில் அவளிடம் பணமும் பெற்றுக் கொள்வான். கமலவல்லியும் இவன் மீது அதிக அன்புகொண்டு அவனுக்கு வேண்டிய புத்திமதிகள் கூறி வந்தாள். பத்து தினங்கள் கழிந்ததும் பொன்னுசாமி அவ்வூரில் ஒருவரிடம் மூன்னூறு ரூபாய் கடன் வாங்கிக்கொண்டு, கமலவல்லியிடம் வந்து, "நான் வெளியூர் போகிறேன்; அப்போதைக்கப்போது உனக்குக் கடிதம்

எழுதுகிறேன்; என் தந்தை அதிக பலவீனப்பட்டிருக்கிறபடியால் அவர் இனி அதிக நாள் ஜீவிப்பது கஷ்டம்; அவருக்கு ஏதாவது நேரிட்டால் எனக்கு உடனே தந்தி கொடு'' என்றான். இதைக் கேட்ட கமலவல்லி திடுக்கிட்டவளாகி, "நீ ஏன் இன்னும் ஊர் ஊராகத் திரிகிறாய்? உன் தந்தையுள்ள வரையில் அவர் முகத்தையடிக்கடி பார்த்துக்கொண்டு என் வீட்டிலேயே நீ சுகமாக இரு; பணம் எப்போதும் கிடைக்கும்; நம்மீது அன்புள்ள மனிதர்களின் முகம் என்றைக்கும் காணும்படிக் கிடைக்காது: ஏதோ கிடைக்கிற வரையில் அந்தத் திருமுக தரிசனத்தைப் பெரிய லாபமாக எண்ணிக்கொள். உன்னை உன் தந்தை வெறுத்தாலும் அவரை விட்டுத் தூரப்போகாதே'' என்றான். அதற்குப் பொன்னுசாமி, "காலாற மேய்ந்து திரிந்த மாட்டைக் கட்டிப் போட்டால் நிற்குமா? அதுபோல், வெளியூர்களில் உல்லாஸமாய்த் திரிந்துகொண்டிருப்பதே என் மனதிற்குப் பிரியமாய் இருக்கிறது; ஆதலின், போக விடை கொடு'' என்றான். கமலவல்லியும் அவனது போக்கைக் கண்டு புன்னகைகொள்ள, அவனும் அவளிடம் விடைபெற்றுச் சென்றான்.

## அத்தியாயம் ௯.

### கிருஷ்ணவேணியின் ஏமாற்றம்.



சில பெண்களுக்கு எவ்வளவு சேலைகள் இருந்தாலும் திருப்தி படுவதில்லை. மேன்மேலும் பணத்தைச் செலவிட்டுத் துணிகளின்மீது போட்டுப் பெட்டியில் அடுக்கி மக்க வைப்பது வழக்கம். இதில் கிருஷ்ணவேணியும் ஒருவளாதலின், தன் தந்தையோடும் ஜவுளிக்கடைக்குச் சென்று தனக்குப் பிடித்தமான புது மோஸ்தர் புடவைகளில் இரண்டு எடுத்துக்கொண்டு திரும்பினாள். நடுவழியில் அவள் தந்தை இறங்கிக் கொள்ள, கிருஷ்ணவேணிமட்டும் வண்டியில் செல்வதற்குப் புறப்படுகையில் அந்தப்பக்கமாக ஒரு மனிதன் நடந்துபோவதைக் கண்டு அவனைக் கவனிக்கலானாள். அம்மனிதன் முன்பு தன் தமயன் இராஜசந்திரன் கூறிய உருவப்படியே இருந்ததுமன்றி, கையில் இரவை மோதிரமும், செவிகளில் இரவைக் கடுக்கனும் அணிந்து அதிக டம்பமாக உடுத்தியிருந்தான். அந்த சமயம் எதிராஜன் குறுக்கு வீதியிலிருந்தும் வந்து இம்மனிதனைக் கண்டதும் 'தங்கவேலு, எங்கே போகிறாய்' என்றான். அந்த மனிதனும் உடனே திரும்பிப் பார்த்து எதிராஜனுடன் பேசத் தொடங்கினான். அச்சமயத்தில் டாக்டர் சிங்காரவேலு அந்தப்பக்கமாய் வர, கிருஷ்ணவேணி அவரை நோக்கி அந்த மனிதனைத் தெரியுமா என்று விசாரித்தாள். அதற்கு அவர், 'அவனைத் தெரியும்; அவன் பௌரிங்குப்பேட்டை ஸ்டேஷன்மாஸ்டருக்கு, மிகவும் நெருங்கிய பந்து; அவன் பெயர் தங்கவேலு' என்று கூறிச் சென்றார்.

ஃ

கிருஷ்ணவேணி அதிக சுறுசுறுப்புடன் தன் வண்டியைக் கண்ணப்பனின் வீட்டிற்கு விடுமாறு செய்து, கண்ணப்பனின் அறைக்குட் சென்றாள். அங்கு கமலவல்லியும் கண்ணப்பனும் ஸந்தோஷமாகப் பேசிக்கொண்டிருந்தனர். கண்ணப்பன் கிருஷ்ணவேணியைக் கண்டு குதூகலத்துடன் எங்கே வந்தாயென்றான். கிருஷ்ண

வேணி தான் வாங்கிய சேலைகளைக் கண்ணப்பனுக்குக் காண்பித்தாள். கண்ணப்பன் அதை வாங்கிப் பார்த்து விட்டுக் கமலவல்லியிடம் தந்து எவ்வளவு விலை யிருக்கும் என்று வினவினுன். கமலவல்லி அதைத் தொட்டும் பாராமல், "நானென்ன புடவை விற்பவளா ?—வாங்கினவர்களைக் கேட்டால் விலை தெரிகிறது" என்று கூறிக்கொண்டே எழுந்து மாடிக்குச் சென்ருன். அவள் போனதும் கண்ணப்பன்,

—'நீ இந்தச் சேலையைக் காண்பிப்பதற்காகவா இங்கு வந்தாய் ?' என்ருன்.

—"இல்லை இல்லை; இந்தச் சேலையைக் காண்பிக்கவந்ததுபோல் வெளிக்கு அபிநயித்து, உன்னிடம் ஒரு முக்கியமான சங்கதியைக் கூற வந்தேன்."

"அப்படி என்ன சங்கதி ?"

"முன்பு என் தமயன் கூறிய தங்கவேலு என்ற பெயர் ஞாபகமிருக்கிறதா ? அவனைக் கடைத்தெருவில் கண்டேன். அவன் பௌரிங்குப் பேட்டையிலிருக்கிருனென்று டாக்டர் சிங்காரவேலு தெரிவித்தார். அந்த மனிதனேடு எதிராஜன் ஏதோ பேசிக்கொண்டிருந்தான்."

என்று ஸகலமும் விவரமாக உரைத்தாள். இதைக் கேட்டதும் கண்ணப்பன் நான் ஸ்டேஷன்மாஸ்டரைக் கண்டு விசாரித்துவிட்டு வருகிறேன் என்று புறப்பட்டான். அதன் பின் கிருஷ்ணவேணி தன் வண்டியில் வீட்டிற்குச் சென்ருள். கமலவல்லி அதுவ்வரையும் மாடியினின்றும் கீழே இறங்கி வரவில்லை.

ஃ

கண்ணப்பன் ஸ்டேஷன்மாஸ்டரைக் கண்டுகொண்ட சமயத்தில் அவர் பக்கம் ஒருவர் உட்கார்ந்திருந்தார். அவரைக் கண்டு கண்ணப்பன், "இவர் யார் ?" என, அதற்கு ஸ்டேஷன் மாஸ்டர், "இவர் என் நெருங்கிய உறவினர்; ஒரு வழக்கை நடத்துவதற்கு வக்கீல் வேண்டுமென்று இங்கு வந்திருக்கிருர். தாங்களும் நல்ல சமயத்தில் வந்தீர்கள். இவர் பெயர் தங்கவேலு" என்ருர்.

தங்கவேலு:—நான் நாளையதினம் தஸ்தாவேஜிகளை யெல்லாம் எடுத்துக்கொண்டு தங்களிடம் வருகிறேன். தாங்களே என் வழக்கை நடத்த வேண்டும்.

கண்ணப்பன்:—அப்படியே செய்யுங்கள். நீங்கள் இவ்வூருக்கு எப்போது வந்தீர்கள் ?

தங்கவேலு:—இன்று காலையில் தான் வந்தேன். நாளை மாலையில் புறப்பட்டுப் போய்விடுவேன்.

கண்ணப்பன் இவன்தான் கிருஷ்ணவேணி கூறிய மனிதனுக இருக்க வேண்டுமென்ற தீர்மானித்தவனுய் ஸ்டேஷன்மாஸ்டரிடம் சிறிதுநேரம் பேசியிருந்துவிட்டு விடைபெற்றுச் சென்ருன்.

ஃ

கண்ணப்பன் வீட்டிற்குத் திரும்பியதும் ஞானகியை யழைத்து, நாளை

---

கொலைகாரனையாவது வீட்டிற் சேர்க்கலாம். விபசாரக்கள்வனை வீட்டில் ஒருநிமிஷமும் சேர்க்கவொண்ணுது. குடும்ப ஸ்திரீகளைக் கெடுத்த சண்டாளர்கள் எண்ணிலர். விவாகத்திற்குக் காத்திருந்த பெண்களை மயக்கிப் பாழ்படுத்தியவர்களும் அநேகர். எல்லாம் நெருங்கிய பந்துக்கள் தான்.

யதினம் இவ்விடத்திற்கு ஒரு மனிதன் வருவான்; அவன் என்னிடம் பேசிக்கொண்டிருக்கையில் நீ என் அறையினுள் நுழைந்து மேஜையைத் துடைப்பதுபோல் அவனைக் கவனித்து எனக்கு அவன் இன்னுனெனக் கூறவேண்டும். அவன் உன் தங்கை அபிராமியை நேசித்தவனுகவும் ஒருசமயம் இருக்கலாமாதலின் நன்ருக அவனைக் கவனித்துப் பார் என்ருன். ஃ

மறுநாள் தங்கவேலு கண்ணப்பனைக் கண்டு தன் ரிக்கார்டுகளை யெல்லாம் காண்பித்தான். ஜானகி அந்த சமயம் மேஜையைத் துடைக்க வருவதுபோல் உள்நுழைந்து அவனைச் செவ்வனே கவனித்துவிட்டுச் சென்ருள். கண்ணப்பன் தங்கவேலுவின் தஸ்தாவேஜுகளை யெல்லாம் வாசித்துவிட்டு, தான் வழக்கை நடத்தி வர வேண்டிய பணத்தை வசூலித்துக் கொடுப்பதாயும், விலாசம் தெரிவித்துவிட்டுச் செல்லும்படியும், தேவையானபொழுது கடிதம் எழுதுவதாயும் புகன்ருன். தங்கவேலு தன் விலாஸத்தைக் கொடுத்துவிட்டு வக்கீலை வணங்கி விடைபெற்றுச் சென்ருன். செல்லும் வழியில் எவ்விதமும் தன் வழக்கு ஜெயித்துவிடுமென்றும், வக்கீல் மிகவும் தேர்ந்தவரென்றும், அவர் வாய்திறந்து பேசின மாத்திரத்திலேயே அந்த நிமிஷமே தன் பக்கமாகக் கோர்ட்டார் தீர்ப்பு சொல்லிவிடுவார்களென்றும், வழக்கம்போல் வக்கீலின் வீட்டிற்கு வருகிற கக்ஷிக்காரர்கள் நினைத்துக்கொள்வதுபோல் ஏதேதோ கருதி மகிழ்ந்தவனுய்ச் சென்ருன். அந்தந்த வக்கீல் தன்னையே தேர்ந்தவரென்று நினைத்துக்கொண்டு பெரிய பெரிய பேச்சுகள் பேசுவது வெகு விநோதம்! அந்த வக்கீல்களையே பெரிய நீதிபதிகள் போல் பாவித்து நடுங்கிப் பணிந்தவாறு கக்ஷிக்காரர்கள் அப்பொழுதே வெற்றிகொண்டதுபோல் பூரிப்பது அதனிலும் வெகு விநோதம்! இந்த வக்கீலும் கட்சிக்காரனும் ஏமாறிவிடும்படிக் கோர்ட்டார் எதிரிடையாகத் தீர்ப்பு கூறிவிடுவதும் எல்லாவற்றிலும் பெரிய விநோதம். விவகாரத்தில் சிக்கிக்கொண்டவன் வக்கிலின் வார்த்தையையே வேத வசனமாக நினைக்க வேண்டி வருகிறது. இந்தப்பக்கத்து வக்கீல் அந்தப்பக்கத்து வக்கீலைப் புத்தியில்லாதவனென்றும், திறமைக் குறைவுள்ளவனென்றும் இகழ்வதும் ஒரு வேடிக்கையே. ஆயினும், வக்கீலும், வைத்தியரும் ஆபத்து காலத்தில் சமயஸஞ்சீவியாக முன்வந்து கைகொடுத்து ஆதரித்துத் தைரியம் கூறித் தேற்றி ரக்ஷிக்கிருர்களென்பதை மனஸ்பூர்வமாக ஒப்புக்கொள்ள வேண்டியதே. ஒரு வக்கீலையும், ஒரு வைத்தியரையும் தனக்கென்று தெரிந்துவைத்திருப்பது என்றைக்கும் நன்மையே தரும். ஃ

தங்கவேலு சென்றபின் அவன் தந்த விலாஸத்தைக் கண்ணப்பன் பத்திரமாக வைத்துவிட்டு ஜானகியை யழைத்து அம்மணிதனைக் கவனித்தாயா, அவன் யார் தெரியுமா? என்ருன்.

ஜானகி:—அவன் யாரோ எனக்குத் தெரியாது. அவன் என் தங்கையிடம் பேசியவனல்ல.

கண்ணப்பன்:—பௌ ரிங்குப் பேட்டையிலிருந்து தங்கையிடம் ஒரு

---

என் புத்தியோ ஸ்வல்பம்; என் படிப்போ குறைவு; ஆனல், என் ஹிருதயம் சுத்தமானதால் என் பார்வை தெளிவா யிருக்கிறது. அதற்குத் தக்கபடியே நடத்தையும் நல்லதாக அமையுமன்ருே?—ஏன் அமையாது?

மனிதன் வருவதாகக் கூறினாயே? அவன் இவன்தானா?

ஜானகி:—அவனல்ல, இவன் வேறே.

கண்ணப்பன்:—இவன் பெயரும் தங்கவேலு தான். இவன் பௌரிங்குப் பேட்டைக்கருகில் இருப்பவன்.

ஜானகி:—நான் என் தங்கையிடம் வந்த மனிதனை ஓர்நாள் மாலைப்பொழுதில்மட்டுமே பார்த்தேன். அவன் என்னைக் கண்டதும் எழுந்துபோய் விட்டபடியால் அவன் முகத்தை அவ்வளவு சரியாக நான் கவனிக்க முடியவில்லை.

என்றாள். இவளிடமிருந்து தனக்கு யாதொரு உண்மையும் புலப்படாமையினால் கண்ணப்பன் ஏமாற்றமடைந்தான். பிறகு எதிராஜனைத் தருவித்து அவனுடன் பேசினான்.

கண்ணப்பன்:—நீ நேற்று காலையில் தங்கவேலிடம் வீதியில் பேசிக் கொண்டிருக்கவில்லையா?

எதிராஜன்:—ஆம், அதைப்பற்றி என்ன?

கண்ணப்பன்:—அந்தத் தங்கவேலு அபிராமியின் தந்தையைக் கொன்றவனா?

எதிராஜன்:—அபிராமியின் தந்தை கொல்லப்பட்டபோது இராஜ சந்திரனை மட்டுமே கண்டிருக்கிறேன். அதைத் தான் நான் நியாயஸ்தலத்திலும் கூறினேன்.

கண்ணப்பன்:—அது சரி, அந்த சமயம் தங்கவேலு என்பவனும் அங்கு இருந்திருக்கிறான். நீ மறுபடியும் நன்றாக யோசித்துக் கூறு.

எதிராஜன்:—உண்மையைக் கூறுவதற்கு யோசனை என்ன? நான் பேசிக்கொண்டிருந்த தங்கவேலு அந்தக் கொலை நடந்த சமயம் இந்த ஊரிலேயே இல்லை. ஆயினும் விசாரித்துப் பார்க்கிறேன்.

என்று கூறி விடைபெற்றுச் சென்றான். பிறகு கண்ணப்பன் கிருஷ்ணவேணியின் வீட்டிற்குச் சென்று அவள் சந்தேகித்த மனிதன் கொலை செய்த தங்கவேலு அல்லவென்று தெரிவித்துத் திரும்பினான்.

## அத்தியாயம்—10.

### சென்னையில் கமலவல்லி.



எவ்வளவு செல்வங்களுடன் கூடியிருப்பினும் மனோ சமாதானமில்லாதவர்களுக்கு அவற்றால் எவ்வித சுகமுமில்லை. தன்னை ஒருவன் பகைக்கிறான் என்றாவது, தனது சுகத்திற்கு ஒருவன் தடைக்கல்லாக இருக்கிறான் என்றாவது, தனக்கு வேண்டியவர்கள் தன் மீது பாராட்ட வேண்டிய அன்பை மற்றோரிடத்தில் கொண்டிருக்கின்றார்களென்றாவது, தனது ஸ்தானத்தை எந்த நிமிஷமும் மற்றவர்கள் அபகரித்துக் கொள்ளக் காத்திருக்கிறார்களென்றாவது, தன் சுக செல்வங்களைச் சீக்கிரத்தில் பறிகொடுத்

---

ஒரு குடும்பத்தின் முற்போக்குக்கான காரியாதிகளை உருவாக்கி விசை திரட்டும் ஸ்தானம் அக்குடும்பத்திற்கு உழைக்கும் தலைவனிடமேதான் இருக்கிறது. அவனைத் தாழ்த்திக் கேவலப்படுத்துவது குடும்ப க்ஷேமத்தைப் பாதிக்க வைக்கும் என்பதை வீட்டிலுள்ளவர்கள் அறியவேண்டும்.

றிட நேருமென்றுவது உணருங்காலை யில் எத்தகைய மனேவுறுதி கொண் டவர்களும் மனே சமாதானம் தப்பிப் போய் அங்கலாய்ப்பது சகஜம். அது போல், கமலவல்லிக்குக் கிருஷ்ண வேணி எங்கு தனக்குப் பதிலாக வந்து விடுகின்ருளோவென்ற கவ லேயே அதிகமாகி, அதனல் தேகம் மலின மடைந்து, அன்ன ஆகாரம் உட்கொள்ள விருப்பமின்றிப் பாயும் படுக்கையுமானுள். துரதிஷ்டத்திற் கேற்ப நெஞ்சவலி யொன்றும் புதி தாகக் கூடிக்கொண்டது. டாக்டர் அவளைச் சென்னைக்கு அனுப்பினல் சமுத்திரக் காற்றைச் சுவாசிப்பதினுல் குணம் ஏற்படலாமென்று கூறினர். கண்ணப்பனும் அதற்கு இணங்கி ஜானகியின் துணையோடு குழந்தை களுடன் கமலாவைச் சென்னைக்கு அனுப்பி வைத்தான். தானும் கூடச் சென்று திருவல்லிக்கேணிக் கடற் கரைக்கு அருகில் வீடொன்றை அமர்த்தி அங்கு கவலவல்லியை இருக் கச் செய்து திரும்பினன்.

ஃ

கமலா சென்னையிலிருந்த போதி லும் அவளுடைய மனமெல்லாம் கிருஷ்ணவேணியின் மீதே பாய்ந் தது. இப்பொழுது கண்ணப்பன் தன் தொந்திரவின்றிக் கிருஷ்ண வேணி யுடன் ஆநந்தமாய்ப் பேசிக் கொண் டிருக்க சௌகரியப்படுமல்லவா என்று நினைத்துக் கண்ணீர் விட்டாள். உலகில் முதல் தாரமாக வந்தவர் களுக்குப் பெரும்பாலும் இவ்விதமே துக்கம் சூழ்கின்றது. அவர்களுக்கு ஓயாச் சஞ்சலங்கள் கூடிக்கொள்கின் றன. இன்னும் தரித்திரமாயும் வாழ நேருகின்றது. கணவனுடைய மனஸ் தாபங்கட்குப் பாத்திரையாகி ஸந் தோஷ மென்பதே யற்றுப் போகி ருர்கள். இவர்களின் காலம் இவ்வி தம் கழிந்து கண்மூட, இவர்களுக்குப் பிறகு இரண்டாந்தாரமாக வருகிற வர்கள் அதிர்ஷ்டசாலிகளாய் முன்ன வள் சேர்த்து வைத்துச் சென்ற வற்றை யெல்லாம் தங்களுடைய தாக்கிக்கொண்டு செல்வமும் மகிழ்ச் சியுமாய்க் கணவனையும் அதிகாரஞ் செய்தவாறு வாழ்கின்ருர்கள். அது அவர்களுடைய பாக்கியம் போலும்!

ஃ

இரண்டு வாரங்கட்குப் பிறகு கண்ணப்பன் சென்னைக்கு வந்து கமலாவைக் கண்டான். அவளுடைய தேகம் குணமடைந்து வருவதை யறிந்து அதிக ஸந்தோஷத்தாற் பூரித் தவனுகி அவளை முத்த மிட்டுக்கொண் டான். "கமலா! இனி உனக்குப் பய மில்லை; கடவுள் காப்பாற்றி விடுவார். உன் வியஸனமே எனக்குப் பெரியதா யிருந்தது. நீ சீக்கிரத்தில் குண மடைந்து வீட்டிற்கு வந்து விடுவாய். இனி இரண்டு வாரங்கள் மட்டும் சென்னையில் இருந்தால் போதும்" என்று கூறினுன். தன் நாயகன் தன் மீது வைத்துள்ள வாஞ்சையை நினைத்துக் கமலா பூரித்தாள். கண் ணப்பன் மூன்று தினங்கள் கமலாவுட னிருந்துவிட்டுச் சென்ருன். கமலா முன்னிலும் ஆரோக்கியவதியாய் விளங்கினள்.

ஃ

ஒருநாள் மாலை உலாவுவதற்காக வழக்கம்போல் கடற்கரைக்குச் சென் ருள். அச்சமயம் டம்பாகாரமான உடையுடன் ஓர் மனிதன் தன்னை எதிர் நோக்கி வருவதைக் கண்டாள். இவன் யாரென்று சிந்தித்துக் கொண் டிருக்கையில், வந்த மனிதன் தன்

---

உன்னுடைய ஹிருதயத்தில் எல்லையற்ற ஆநந்தமும் அமைதியும் பொங் குவதாக.

மூக்குக் கண்ணாடியைக் கையி லெடுத்தபடியே "கமலா! நீ இவ் வூருக்கு எப்போது வந்தாய்! உன்னை நான் இரண்டு நாட்களாகப் பார்த்து வருகிறேன்; அந்தப் பாழும் ஜானகி உன்னுடனேயே இருந்ததால் உன்னு டன் பேசச் சந்தர்ப்பப் படாமலிருந் தது" என்றான். இவன்தான் பொன் னுசாமி. இவனைக் கண்டதும் கமலா ஸந்தோஷ மடைந்தவளாகி, "நான் இவ்வூருக்கு வந்து மூன்று வாரங் களாயின; அதிக காயலாவாய் விட்ட படியால் டாக்டர்கள் எனக்குக் கடற் காற்று அவசியமென்று இங்கு அனுப் பினார்கள். நான் திருவல்லிக்கேணி யில் வசித்து வருகிறேன்" என்றாள்.

பொன்னுசாமி:—கண்ணப்பன் இங்கு இல்லையா?

கமலா:—இல்லை; அவர் என்னை அடிக்கடி வந்து பார்த்துப்போகிறார்.

பொன்னுசாமி:—நீ தனியாகவா இருக்கிறாய்? மிக்க ஸந்தோஷம். இவ்விதம் ஏகாந்தமாய் உன்னைக் காண்பே னென்று நான் நினைக்கவே யில்லை. அது என் அதிர்ஷ்டம்!

கமலா:—நானும் இவ்விடம் அறி முகமானவர்கள் யாருமில்லாததால் வாடி யிருந்தேன். ஆனால், மறுநாள் கிடைக்கக்கூடிய "சுதேச மித்திரன்" பத்திரிகை முதல் தினத்து மாலையி லேயே இங்கு கிடைத்து விடுவதில் அது வெகு ஸந்தோஷமாயிருக்கிறது.

பொன்னுசாமி:—உன் வீட்டை எனக்குக் காண்பித்தால் நானும் அங் கேயே வந்து உன்னுடன் இருக்கி றேன்.

கமலா:—என் கணவர் இல்லாத சமயத்தில் நான் இருக்குமிடத்தில் நீ தங்குவது ஒழுங்காக மாட்டாது. தனித்து வசிக்கும் என்னுடன் பேசு வதுகூடக் குற்றமாகும். நான் அன் னிய ஆடவர்களிடத்தில் அதிக ஸந் தேகம் கொண்டவள். அதிலும் உன் னுடைய யோக்கியதை சொல்லவேண் டியதில்லை. நான் பர்த்தாவின் மீது கிருஷ்ணவேணி விஷயமாய் சந்தே கம் கொண்டவள். இப்போது என் பர்த்தா என்னை சந்தேகிக்கும்படி நான் நடக்கக் கூடாது.

ஃ

பொன்னுசாமி சிரித்துக் கொண்டே அவளுடன் வழி நடக்கும் போது மெதுவாகக் கமலாவின் தோள்மீது கையைப் போடலானான். கமலா உடனே அருவருப்புடன் அவன் கையைக் கீழே தள்ளி விட்டுச் சிறிது தூரத்திற் சென்றாள். பொன்னுசாமி தான் சிறுபிராயத்தில் கமலாவுடன் விளையாடியதையும், மற்ற வீண் வார்த்தைகளையும் கூறி னான். கமலா அதைக் கவனியாதவள் போல் நடந்து தன் வீட்டிற்குச் சென்று விட்டாள். பொன்னுசாமியும் தொடர்ந்து சென்றான். கமலா வீட் டிற்குட் சென்று களைப்புடன் ஓர் பெஞ்சியில் உட்கார்ந்தாள். அவளுக் குப் பக்கத்தில் பொன்னுசாமியும் உட்கார்ந்தான். கமலா சட்டென்று எழுந்து எதிரே யிருந்த சோபாவில் போய் அமர்ந்தாள்.

கமலா:—நீ இவ்வூருக்கு ஏன் சனியனாக வந்தாய்? நீ இங்கு என்ன வேலையிலிருக்கிறாய்?

பொன்னுசாமி:—பொழுது போக் கவே இங்குவந்தேன். என் அதிர்ஷ்ட காலம் மாறி விட்டது. என் தந்தை யின் சொத்துக்கள் எனக்குச் சேரு மென்று நம்பி யிருந்தேன். அவை

---

சாந்தமும் தைரியமும் மனதில் நிறைந்திடில் உற்சாகத்திற்குக் குறைவு ஏது?

யாவும் வீணுய் விட்டது. என் தந்தை வெட்கமின்றி நடந்து கொண்டு விட்டார்.

கமலா :—உன் தந்தையா? அவர் என்ன அப்படி நாணங்கெட்டு நடந்து கொண்டது?

பொன்னுசாமி :—உனக்குத் தெரியாதா? அவர் மறுவிவாகம் செய்து கொண்டார். யௌவன வயதில் பெண்களை விரும்புவதைவிடக் கிழட்டுப் பிராயத்தில் தான் ஆடவர்கள் விசேஷமாய்ப் பெண் மோகம்பிடித்து எந்தச் சிறிக்கியாவது கிடைக்க மாட்டாளாவென்று அலைந்து, அப்படிக் கிடைத்தால் அவளுக்கே எல்லா சொத்துக்களையும் கொடுத்துத் தொலைக்கிறார்கள். அவளுடைய சரீர இன்பத்தைத் திருப்தி செய்ய முடியாமல் அவன் காலில் விழுந்து பொறுத்துக்கொள்ளும்படியும் வேண்டுகிறார்கள். அவளோ பணத்துக்காகவே இந்தக் கிழவனை விரும்பியவளாய் சரீர இன்பத்திற்கு மற்றொரு இடத்தில் திருப்தி கொள்ளப் பிரயத்தனித்து விடுகிறாள்.

கமலா :—அடடா! மூடத்தனமே! உன் தந்தைக்கு அறுபது வயதிற்கு மேலாயிற்றே. விவாகம் செய்து கொண்ட பெண்ணுக்கு என்ன வயதிருக்கும்?

பொன்னுசாமி :—அந்தப் பெண் மகா ரூபவதி. பதினெட்டு வயதிருக்கும். சுடுகாட்டை எட்டிப் பார்க்கிற கிழங்களும் கல்யாணம் என்றால் கலகலவென்று சிரித்து ஸந்தோஷ மிகுதியால் பல்லைக்காட்டி இளிக்கிறார்கள்.

கமலா :—உன் தந்தைக்கு இந்த வயதில் பெண் கொடுக்கவந்த மூண்டம் யாரோ?

பொன்னுசாமி :—பணத்திற்கு ஆசைப்பட்டு எவ்வளவோபேர் தாரத் தயாராக இருக்கிறார்கள். பணத்தின் திமிர் எந்தக் கிடைக்காத ஒன்றையுங் கூடச் சுலபமாய் வாங்கச் செய்து விடும். இப்பொழுது என் தந்தை சிறந்த வைத்தியரொருவரைக் கொண்டு தன் தேகத்தை வாலிபமாக்கிக்கொள்ள முயன்று கொண்டிருக்கிறார். அவர் புசிப்பு இப்பொழுது இராஜ போஜனமாயிருக்கிறதென்று சொல்லுகிறார்கள். அந்தப் பெண்ணுடன் அவளுடைய தாய் தந்தையரும் கூட வந்து குடியேறி விட்டார்கள். நன்றாகப் புசித்து சொத்துகளை அழிக்கத் தொடங்கி யிருக்கிறார்கள்.

கமலா :—உன் கடன்காரர்களுக்கு என்ன வழி? அவர்களுக்கு ஸ்ரீரங்கத்து யானைக்குப் போடுவதுபோல் பெரிய நாமம் போட்டு விட்டாயா?

பொன்னுசாமி :—என்ன செய்வேன்! என் கடன்காரர்கள் எனக்கு லாயர் நோட்டீஸ் அனுப்பி விட்டார்கள். என்னைச் சிறைக்குக் கொண்டு போகத் துணிந்து வாரண்டுகளும் வாங்கி விட்டார்கள். நான் தலைமறைவாய் ஒளிந்து கொண்டிருக்கவே சென்னைக்கு ஓடிவந்தேன். என் தந்தை சுயமாக சம்பாதித்துக் கட்டியது ஒரு பங்களா தான். மற்ற பங்களாக்களெல்லாம் அவருடைய தகப்பனாகிய என் பாட்டனார் சம்பாதித்த படியால், பாட்டன் சொத்து பிள்ளையைவிடப் பேரனுக்கே அதிக பாத்தியமாகும். அதை என் தந்தை விற்க முடியாது. என் தந்தை செத்து மண்ணானதும்நான் அவற்றை விற்று என் கடன்களைத் தீர்த்து விடுவேன். மீதிப் பணத்தில் வியாபாரம் செய்து பிழைப்பேன்.

கமலா :--வெகு நேர்த்தியாக மனக் கோட்டை கட்டுகிறாய். நீ தாசி வியாபாரம் செய்வதிலும், கள் சாராயம் வாங்குவதிலும் தான் கைதேர்ந்தவன். (தொடரும்.) S. G. R.

# சென்றமாதம்

**மௌலானா ஷௌகத் அலி:—** இப்பெரியார் ஓர் ஆங்கிலப் பெண்ணைத் தமது விருத்த வயதில் விவாகம் செய்துகொண்டு புதுமாப்பிள்ளையாகிவிட்டார். வயோதிகத்தின்போதுதான் விவாகத்தில் அதிக அவா ஏற்படுகிறதாம்!

ஃ

**கும்பகோணம் மஹாமகம்:—**12-வருஷங்கட்கு ஒருமுறை வரும் இம்மஹா உத்ஸவம் 1933-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் நடைபெறும். ஒரு மதத்தினருக்குப் பிரதானமாயுள்ள விழாவை மற்ற மதத்தினர் பரிகஸிப்பதும், தங்களின் பண்டிகைகளைமட்டும் கொண்டாடிப் பேசுவதும் ஸர்வ சாதாரணம். பிறர் குற்றம்தான் அதிகமாகக் கண்ணில் படுகிறது.

ஃ

**ஒரு தாயின் கொடுமை:—**ஒரு தாய் தன் குமாரன் தனக்குத் சயா விஷயமாய்த் தருவதாகச் சொன்ன ரூபாய்களை, அவ்விதமே தருகிறேனென்று கோயிலுக்கு வந்து சத்தியம் செய்யுமாறு வற்புறுத்தினாள். குமாரனும் கோயிலில் கற்பூரத்தைக் கொளுத்தி சத்தியம் செய்து தந்து, பின் அத்தொகையையும் செலுத்தினான். தாய்க்கும் மகனுக்கும், மாமிக்கும் மருமகளுக்கும், தமயனுக்கும் தம்பிக்கும் நடுவே நம்பிக்கை முறிந்து மனம் பேதப்பட்டால் மூன்றாவது அன்னிய மனிதர்கள் உள்நுழைந்து லாபமடைகிறார்கள். குடும்பத்தின் ரகசியம் வெளியில்வந்து கேவலப்பட்டு நாறி ஊரும் சிரிக்கிறது.

ஃ

**தண்ணீர் பண்டிகை:—**இரங்கூனில் 12-4-32 முதல் மூன்று தினங்கள்வரை பர்மியர் மழையை வரவழைத்தற்கென்று வழக்கப்படி தண்ணீர் பண்டிகை கொண்டாடினர். கன்னிகைகள் திரள்திரளாக பாத்திரங்களில் ஜலத்துடன் செல்வர். வழியில் இவர்கள்மீது பர்மியர் ஜலத்தைக்கொண்டு வந்து கொட்டி வணங்குவர். கடைசியில் இக்கன்னியர் புத்தாதுகோயிலுக்குச் சென்று மைய்யா என்ற புத்தபகவானை வணங்கி ஜலத்தை அபிஷேகம் செய்வர். இதனால் உடனே மழைபொழியுமென்பர். எவ்வாறேனும் தெய்வபக்தி நன்மை தரும்.

ஃ

**கோவில்ல் நாகஸர்ப்பம்:—** கோபிச்செட்டிப்பாளையம் மாரியம்மன் கோவிலில் ஒரு நாக ஸர்ப்பம் படமெடுத்தாடிற்று. அது எவருக்கும் தீங்கு செய்யவில்லை. அது தானாகவே அங்கு வைக்கப்பட்ட மட்பாண்டத்துக்குள் நுழைந்துகொண்டது. அதைப் பக்தியுடன் ஊருக்கு வெளியில் விட்டுவிட்டனர். தெய்வமஹாத்மியம் எத்தனையோ வழிகளில் வெளியாகின்றது.

ஃ

**ஸ்ரீ ராஜலக்ஷ்மியின் தற்கொலை:-** தனது கணவன் படுத்திய கொடுமைகளைச் சகிக்கமுடியாமல் இப் பெண்மணி சென்னையில் தூக்கிட்டுக்கொண்டு கடவுளிடம் சென்றாள். ஸ்திரீகளின் சுதந்திரம் பெருகிவிட்டதென்று ஒரு பக்கத்தில் மேளத்தின் சப்தம் கேட்க, மற்றொரு பக்கத்திலோ பெண்கள் குடும்ப ஹிம்ஸைகளைத் தாளாமல் மிக்க நிர்ப்பந்தத்திற்குள்ளாகித் தூக்கிட்டுக்கொண்டு சாகும் தொனி செவியிற் படுகின்றது. இறந்த பெண்ணின் வயது 16-தான்.

# பாகவத சம்பாஷணை.



மணிமங்கலத்தில் கோபால சடகோப ராமாநுஜதாஸர் பிரசித்திபெற்ற பாகவதர்; பெரிய மடிக்காரர். அவ்வூர்க்கு வரும் பாகவதர்களுக்கு அவரது இல்லமே தங்குமிடம். அவருக்கு பாகவதாபிமானம் மிகவும் அதிகம். ஒருநாள் மாலை சுமார் நான்கு மணிக்கு, திருமேனியில் பன்னிரு திருமண்களும் இலங்க—தம்பூர் ஒரு தோளிலும் அட்சய பாத்திரம் ஒரு தோளிலும் துலங்க—திருக்கழுத்தில் பவித்திர மாலைகள் அரை டஜனும், தாமரை மணி மாலைகள் கால் டஜனும், துளசி மணி மாலைகள் கால் டஜனும் விளங்க ஒரு 'பரம பாகவதர்' கோ-ச-ராமாநுஜதாஸர் வீட்டிற்கு விஜயம் செய்தார். அவரது திருக்கோலத்தைக் கண்டவளவிலேயே ஆனந்தமடைந்த கோ-ச-ரா-தாஸர் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். பின்னர், அவ்விருவரிடையில் பின்வருமாறு சம்பாஷணை தொடங்கியது:—

கோ-ச-ரா-தாஸர்:—"எளனும்! எளனும்!! சாமிகள் இந்தக் குடிசையில் திருவடி சாதிப்பதற்கு என்ன பாக்கியம் பண்ணினேனோ? திருமேனியை சேவிக்கும்போதே மனசுக்கு ரொம்பவும் சந்தோஷமாக இருக்கு. ஸ்வாமிகள் எந்த திவ்ய தேசத்திலிருந்து இவ்விடம் எளுந்தோ? திருமேனி ரொம்பவும் வாட்டமாக இருக்குதே. மத்யானம் அம்சை பண்ணுச்சோ? இல்லையோ?"

புதிதாக வந்த பாகவதர்:—"அடியேன் கோபாலபுரத்திலிருந்து எளுகிறேன் (!). தேவர் வைபவ விசேஷத்தைக் கேள்விப்பட்டதிலிருந்து தேவரீரை சேவிக்கவேணும் என்ற ஆர்த்தி ஜாஸ்தியாக இருந்தது. இப்போ தான் தேவர் சேவை லபிச்சுது. மத்யானம் கோபாலபுரத்தில் பெருமாள் திருப்தியாக ப்ரசாதம் சாதிச்சார். அடியேனது திருமேனி(!) ரெண்டு நாளாய்ப் பாங்காய் இல்லை. எல்லாம் அவன் திருவுள்ளம். 'கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்'—என்று ஆண்டாள் சாதிச்சபடி, தேவாளை ஒத்தவாளை சேவிப்பதைவிட வேறு விசேஷம் என்ன இருக்குது?".

கோ-ச-ரா-தாஸர்:—"இராத்திரிக்கும் நாளைக்கும் ஸ்வாமிகள் இந்தக் குடிசில்லே அம்சைபண்ணலாம். பாகவதாபிமானத்தை விட வேறு ச்ரேஷ்டமானது என்ன இருக்குது? தேவருக்கு திருக்கல்யாணம் ஆய்விட்டதா? திருக்குமாராள் இருக்காளா? 'காலட்சேப'த்துக்குக் குறைவில்லாமல் பகவான் கடாட்சிச்சிருக்காரா? சாமிகள் எத்தனை திவ்யதேசம் மங்களாசாசனம் பண்ணியிருக்கு? திவ்ய ப்ரபந்தத்தில் எவ்வளவு பாசுரங்கள் 'சந்தை'யாயிருக்கு? எந்தெந்த ஸ்ரீகோசங்கள் காலட்சேபம் கேட்டிருக்கு?".

பு-வ-பா:—"தேவர் திருமாளிகையிலே ப்ரஸாதம் உண்பதற்கு என்ன

---

தன் கஷ்டங்களைத் தீர்க்கத் தானே தனக்கு உதவி புரிந்துகொள்ள வேண்டும். தன் எண்ணங்களை நிறைவேற்றக்கூடியவன் தன்னைவிட ஒருவனுமில்லை. தன் சக்தியை நம்பியவன் தலைவனாவான்.

பாக்கியம் பண்ணினேனே! அடியேன் ஸம்ஸாரத்தையே உதறித் தள்ளிவிட்டு ஏகாங்கியாகவே கிளம்பி விட்டேன். தேகபந்துக்களை விட ஆத்ம பந்துக்கள் மிகவும் மேலானவர்களல்லவா? ஏதோ கிஞ்சித்—சம்பத் இருந்தாலும், அதனால் ஆத்மாவுக்கு என்ன பிரயோஜனம்? அடியேன் அஞ்சாறு திவ்ய தேசங்களை சேவிச்சிருக்கேன். தேவரைப் போன்றவாள் வசிக்கும் இடம் எல்லாம் திவ்ய தேசந்தானே! பகவத் சேவையைவிட பாகவதாள் சேவை விசேஷமல்லவா? திருப்பல்லாண்டு திருப்பாவை மாத்திரம் பாராயணம் செய்திருக்கேன். அந்த ரெண்டில் இருக்கிற அர்த்தங்களை தெரிஞ்சுகொள்ளாமல், மற்ற பாசுரங்களைப் பாராயணம் பண்ணுவதில் என்ன பிரயோசனம்? பாகவதாள் சேவையைவிட காலட்சேபம் கேட்பது விசேஷமா? என்ன? "போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே"— என்று ஆழ்வார் சாதிச்சபடி, தேவாளைப் போன்றவாள் சாதிக்கும் ப்ரசாதம், எம்பெருமான் கண்டருளின ப்ரசாதத்தைவிட விசேஷமல்லவா? பாகவதாளுக்கு ததியாராதனம் செய்வதைவிட விசேஷ கைங்கரியம் வேறு என்ன இருக்குது? ஸ்ரீ பெரும்பூதூரில் உடையவர் உற்சவத்தின் போது எவ்வளவு ததியாராதனைகள் செய்கிறார்கள்! ஆகா! பாகவதாள் எவ்வளவு போக்யமாக ப்ரஸாதப்படுகிறார்கள். பருப்பமுது-நெய்-நெய்யமுது—இரண்டுமூன்று கறியமுது—கூட்டமுது — சாத்தமுது—திருக்கண்ணமுது — திருப்பணியாரம்—மோரமுது—இவ்வளவுடன் ததியாராதனம் நடத்துவது எவ்வளவு விசேஷம்! எல்லா கைங்கர்யத்தைவிட இந்த கைங்கர்யமல்லவா பரமச்ரேஷ்டமானது. வேறென்ன அடியேன் சாதிக்க(!)ப் போகிறேன்?"

கோ-ச-ரா-தாஸர் :-"தேவர் எந்த ஆசார்யர் திருவடி சம்பந்தம்? ஆசார்யர் தனியன் என்ன? வாக்கிய குரு பரம்பரை என்னென்ன?" அடடா! தங்கள் பாத்திரத்திலுள்ள அரிசிக்குள்ளே மூன்று கோழி முட்டைகள் இருக்கின்றனவே! இது சரியா?

இக்கேள்விகளைக் கேட்டவுடன், அவற்றிற்குத் தக்க பதில் சொல்லும் வகை யறியாது, புதிதாக வந்த 'பரம பாகவதர்' திரு திருவென்று விழிக்கலானார்.

கோ-ச-ரா-தாஸர் :— பாகவதான் வேடம்தரித்து மாமிஸபக்ஷணம் செய்வது சரியா? ஆசார்யர் தனியன்கூடத் தெரியாமல், பன்னிரு திருமண்களும் பட்டை பட்டையாக சாத்திக்கொண்டவருக்கு, இவ்விடம் சாப்பாடுபோட முடியாது. இந்த ஒரு அணாவைப் பெற்றுக்கொண்டு போய்விடும் என்றார். பாகவதரும் ஒரு அணாவுடன் அவ்விடத்தினின்றும் நீங்கினார். இவ்விதமும் சிலர் உண்டா?—இல்லையா?

ஃ

குறிப்பு :—சம்பிரதாயப் பேச்சுகளையாவது, பாகவதர்களையாவது பரிகசிக்கும் நோக்கத்துடன் இக்கட்டுரை எழுதப்படவில்லை.

ஆரியூர்-வ. பத்மநாப பிள்ளை.

---

ஒரு வேலை செய்வதற்கு எந்த நேரத்தில் நினைத்தாயோ அதுவே நல்ல மேலான நேரமாதலின், அப்பொழுது முதற்கொண்டே அந்த வேலையைச் செய்யத் தொடங்கு. சென்ற காலத்தையாவது, இனி வருங்காலத்தையாவது தன் பிரியப்படி ஒருவனும் உபயோகித்துக்கொள்ள முடியாது.






இன்று கூடிய நமது கடையில் அப்பளாச்சாரி அதிகப் பசியுள்ள தமது நண்பர் ஒருவரைப் பற்றிப் பிரசங்கம் செய்தார். "நான் ஒரு புஸ்தக வியாபாரி, நான் உண்டு, என் புஸ்தகங்களுண்டு. எனக்கு அவகாசம் ஏற்பட்ட காலங்களில் என்னிடமுள்ள புஸ்தகங்களை வாசித்து அவற்றையே என் இனிய நண்பர்களாகக்கொண்டு பெரும்பாலும் ஏகாந்தமாகவே காலம் கழிப்பது என் வழக்கம். வலியச்சென்று ஒருவரது ஸ்நேகிதத்தைப் பிடிப்பது என் சுபாவமில்லை. நட்பு என்ற பதத்திற்குள்ள அதிமேன்மையான பொருளை நான் செவ்வையாக உணர்ந்தவன். அவ்வித உயர்வில் ஒரு நண்பன் கிடைப்பது அரிதென்பதையும் தெரிந்தவன். ஆதலின், சிலரைமட்டும் நெஞ்சோடு நேசித்துப் பெரும்பான்மையோரை அறிமுகஸ்தராகவே மதித்துச் செல்பவன். இத்தகைய என்னிடம் ஒருவர் வலிய வந்து சேர்ந்தார். தாம் நண்பராக இருப்பதாக வெகு பிரியமான வசனங்களால் என் மனத்தை யலங்கரித்து வசீகரித்தார். நானும் உண்மையான அன்புடன் அவரது ஓயா வருகையைக் கௌரவித்து வந்தேன். ஃ

அந்த சமயம் எனக்கு அதிகமான நெஞ்சுவலியாக இருந்தது. புதிய நண்பர் தனக்கு ஒரு ஆயுர்வேத வைத்தியரைத் தெரியுமென்றும், அவருக்கும் தமக்கும் மிக்க அந்நியோந்நியமென்றும் கூறினர். என் நெஞ்சுவலிக்கு ஏதாவது மருந்து கேட்டு வாங்கிவா முடியுமா என்றேன். அவரும் "ஆஹா" என்றார். அவ்விதமே இரண்டு மூன்று தினங்கள் மருந்து கொண்டு வந்தார். நான்காம் நாள் தனக்கு வாசிக்க ஏதாவது புஸ்தகம் வேண்டுமென்றார். தாசியின் வீட்டிற்குச் செல்வோரெல்லாம் அவளுடைய முத்தத்திற்கு ஆசைப்படுவது போல, என்னிடம் வருவோரெல்லாம் மெதுவாக ஒவ்வொரு புஸ்தகத்தையும் தூக்கிக்கொண்டுபோய் விடுவது வழக்கம். இதில் புதிய நண்பரும் சேர்ந்தார் போலு மென்றெண்ணி, மனஸ்பூர்வமாகவே நான்கு ரூபாய் விலையுள்ள ஒரு பெரிய புஸ்தகத்தை அவருக்குப் பரிசாகவே கொடுத்து விட்டேன். அதைப் பெற்றுச்சென்ற அவர் மறுநாள் திரும்பி வந்து, "அந்தப் புஸ்தகம் படித்தாய் விட்டது; வேறு புஸ்தகம் கொடுங்கள் என்றார். நான் திடுக்கிட்டேன். அவ்வளவு சுலபமாக அந்தப் புஸ்தகத்தை ஒரே தினத்தில் படித்துவிட முடியாதென்பது எனக்குத் தெரியும். ஆயினும், மௌனமாய் வேறு மூன்று புஸ்தகங்களைக் கொடுத்தனுப்பினேன். அதற்கு அடுத்ததினம் மீண்டும் திரும்பி வந்து "வாசிக்கப் புஸ்தகம் ஏதாவது இல்லையா? நீங்கள் கொடுத்த புஸ்தகங்கள் அப்போதே வாசித்து முடிந்து விட்டனவே" என்றார். எனக்கு இவர் அதிகப் பசியுள்ள பறிக்கிற நண்பரென்று தெரிந்தது. அவசியம் தமக்குப் புஸ்தகம் தரவேண்டுமென்று வற்புறுத்தித் தொந்தரை செய்தார். அந்தப் புஸ்தகம் இருக்கிறதா?—இந்தப்

புஸ்தகம் இருக்கிறதா?—என்று அதிகாரத்துடன் கேள்விகளும் போடுவதானார். நான் பெரிதும் சிந்திக்கலானேன்.

ஃ

மூற்றிலும் அன்னியராய்த் தூர இருந்த இவர் இப்பொழுது என்னை வெகு தொந்தரைசெய்து புஸ்தகங்கள் கேட்பதற்கு என்ன காரணம்? தினம் ஒரு புஸ்தகமாக இவருக்குக் கொடுப்பதாகில், என் நெஞ்சுவலி தீர்வதற்குள்ளாக என் கடையிலுள்ள அவ்வளவு புஸ்தகங்களும் இவரிடம் போய்ச் சேர்ந்து விடும்போலிருக்கிறதே! தாம் மருந்து கொண்டு வந்து தருவதற்குப் பதிலாகத்தான் இவர் இனும் புஸ்தகங்களை கேட்கிறார்போலுங் காண்கிறது. இவரது மருந்தும் வேண்டாம்; இவருக்குப் புஸ்தகங்கள் தரவும் வேண்டாம். புஸ்தகத்தை இவர் பணமாய் நினைப்பவராகத் தோற்றவில்லை. இலவசத்தில் பறிப்பதையே நோக்கமாகக் கொண்டிருக்கிறார். வைத்தியரிடத்தில் இலவசமாகவே மருந்து பெற்று இங்கு தருகிறார். பிறகு இங்கும் இலவசத்திலேயே பல புஸ்தகங்களைக் கொண்டுபோய்விட முயல்கிறார். ஒரு லாபத்தை யுத்தேசித்துக் காட்டும் நட்பு நீடித்திராது; அது உண்மையான நட்புமாகாது. அவர் தந்த மருந்தை நாம் புசிக்கவே வேண்டாம் என்ற முடிவுக்கு வந்தேன்.

ஃ

மறுதினம் காலையில் புதிய நண்பர் வந்தார். அன்றையதினமாவது தமக்கு வாசிக்க ஏதாவது புஸ்தகங்கள் தரவேண்டுமென்றார். நான் அதற்கு ஏதும் பதில் சொல்லவில்லை. பிறகு மருந்தை யுட்கொண்டீர்களா என்றார். அவரது மருந்தை ஒரு சிறிதும் உபயோகியாமலே அப்படியே எடுத்து வந்து அவர் முன்பு வைத்து, “தங்கள் மருந்தும் வேண்டாம்; நான் புஸ்தகங்களும் தரவில்லை. என்னிடம் இருப்பவை யாவும் வீட்டுப் புஸ்தகங்கள்; அவற்றை இரவலாகவோ இனாமாகவோ தந்து இழந்து ஏமாறுவதற்கு இஷ்டமில்லை. புஸ்தகம் என்பது ஒரு பிரியாத செல்வம்; குடும்பத்தின் ஒரு பெரிய சொத்துமாகும். அதை வீட்டிலுள்ள குடித்தனத்திற்கு உபயோகிக்கும்படியான பித்தளை செம்பு வெங்கல பாத்திர சாமான்களுக்குச் சமமாகவும் சொல்லலாம். வருகிறவர் போகிறவர்களுக்கெல்லாம் ஒவ்வொரு சாமானாக இனாமாகவோ இரவலாகவோ தூக்கித் தந்துவிட்டால், வீட்டில் சமையல் செய்வதெப்படி? பாத்திரங்களின்றிக் குடித்தனத்தை நடத்துவதெப்படி? அது போலவே, ஒரு குடித்தனத்தின் அறிவு விருத்திக்கென்று வைக்கப்பட்டுள்ள புஸ்தகங்களைப் பிறருக்குத் தூக்கித் தந்து விட்டால், அக்குடித்தனத்திற்கு அந்தப்புஸ்தகங்கள் வேண்டியிருக்கும்போது கிடைப்பதெப்படி? அக்குடித்தனம் அறிவு விளக்கம் பெறுவதெப்படி? ஆகவே, வீட்டுப் புஸ்தகங்களை இரவல் கேட்பது பெரிய சண்டாள துரோகச் செய்கையாகும்; வெகு தந்திரமான வஞ்சகச் செயலுமாகும். ஆதலின், அதைத் தருவதே பிசகு. புஸ்தகங்களை இனாமாகவோ, இரவலாகவோ பெறுவதற்காக என்னை நேசம்பிடிக்கவரவேண்டாம்” என்றேன். அதற்குப் பிறகு அதிகமாக ஸம்பாஷணை நடக்கவில்லை. புதிய நண்பரும் மௌனமாகச் சென்றுவிட்டார். அவர் தந்துவந்த மருந்தும் நின்றுவிட்டது. நட்பும் அத்துடன் முடிவுபெற்றது. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்குமல்லவோ?

ஃ

நட்பு என்பது இதுதானோ? தன் நண்பனிடம் அருமையான பொருள்களைக் காணில், அதற்காக ஸந்தோஷ

மடைந்து அப்பொருளைப் பத்திர மாய்ப் பாதுகாக்குமாறு புத்திமதி கூறி, இருமனமும் ஒருமனதாகிப் பர வசப்படுவதன்றோ உயர்நலஞ் சார்ந்த நட்பாகும். இவ்விதம் பறித்துக் கொள்ளையிடும் நண்பர்களை ஒருவன் பெற்றிருப்பதைவிட, எவருடைய சகவாசமுமின்றி ஏகாந்தமாயிருப் பதே பாக்கியம். நட்பு பாராட்ட வேண்டியதுதான்; அதற்காக ஒருவன் தனது வீட்டுப் புஸ்தகங்களையோ, வியாபாரத்திற்கென்று வைத்துள்ள நூல்களையோ இலவசத்தில் தந்து ஏமாறுகை மிகக் கொடியதும் பெரிய தலைப்புச் சங்கதியுமாகும். நண்பர்களா யிருப்போர் புஸ்தகங்களை விலைக்குப் பெற்று ஆதரிப்பின் பெரிய உபகார மாகும். அந்த விஸ்வாசச் சரக்கைக் காணோமே" என்று அப்பளாச்சாரி கூறினார்.

ஃ

இதற்குப் பின் தொந்திப் பெரு மான் எழுந்தார். "நண்பர்கள் என் போர் சத்தியவந்தர்களா யிருக்க வேண்டும். தமது நண்பனின் க்ஷேமத் தைக் கருதியவர்களா யிருக்கவேண் டும். இருபக்கமும் தலையாட்டுவோ ராக இருக்கவொண்ணாது. தனது நண்பனின் கட்சியையே எவ்வகை யிலும் ஸ்தாபிப்போரா யிருக்கவேண் டும். தன் நண்பனின் கட்சிக்கு வேண்டிய ஆதாரங்களைத் தேடுவோ ரா யிருக்கவேண்டும். நிமிஷத்திற்கு ஒரு தினுசாக இருக்கும் நண்பனிடம் தனக்கு வந்த கடிதங்களைக் காண் பிப்பது கூடாது. தனது அந்தரங்க அபிப்பிராயத்தை அவனிடம் சொல் வதும் கூடாது. எதிர்க்கட்சியை நியாயமென்று சொல்லுவோனும், எதிர் கட்சியாரிடம் புது கௌரவம் பெற நினைப்போனும் தன் நண்ப னுக்கு அதிக நன்மை செய்யமுடியா தவனாகி விடுவான். தன் நண்பன் செய்ததே தப்பு என்று சொல்லவும் துணிந்துவிடுவான். ஒரு விஷ யத்திற்கு உடனே உதவிக்குவந்து அதை முடிக்காத நண்பன் இன்று நாளை யென்றே பலதினங்கள்போக்கி மெதுவாக விலகியும், பட்டும் படாம லும் நடந்துகொள்பவனாகவே இருப் பான். இத்தகையோரிடம் நாம் யோசனைகேட்டுப் பயனில்லை" என் றார்.

ஃ

அல்லாபிச்சை கூறியதாவது:— ஒரு நண்பரும் ஒரு அச்சுக்கூடத்தலை வரும் வெகு நெருங்கிய நட்பாக இருந் தனர். அந்த நண்பருக்கு ஒரு உத்தி யோகஸ்தர் வேண்டியவராக இருந் தார். அந்த உத்தியோகஸ்தரின் குமா ரனது விவாகப் பத்திரிகையைத் தாம இலவசத்தில் அச்சிட்டுத் தருவதாகக் கூறி அச்சுக்கூடத்தலைவரிடம் தெரி விக்க, அவரும் மூன்னூறு பிரதிகள் அச்சிட்டுத் தருமாறு தமது சிப்பந்தி களுக்கு உத்திரவு செய்தார். இந்த நண்பர் அந்த விவாகப் பத்திரிகைக ளுடன் உத்தியோகஸ்தரிடம் வந்து, "அச்சுக்கூடத்தலைவர் 300-பிரதி களே அச்சிடும்படி ஏற்பாடு செய்தார்; நானே வேலையாட்களைத் தட்டிக் கொடுத்து 700-பிரதிகள் அச்சிட்டு வந்துவிட்டேன்; என் சாமர்த்தியத் தைப் பார்த்தீர்களா?" என்றார். இவ ரது சாமர்த்தியம் அந்த உத்தியோ கஸ்தருக்கு அருவருப்பாயிருந்தது. நட்புமுறையில் இலவசமாக 300-பிர திகளை அந்த அச்சுக்கூடத்தலைவர் தர ஒப்பியிருக்க, இவர் அச்சுக்கூடத்தலை வருக்குத் தெரியாமல் மேற்கொண்டு 400-பிரதிகள் அதிகமாக அச்சிட்டு வந்திருப்பதைக் கருதுகையில் இவர் சத்தியவந்தரல்லவென்றும், நண்பர்க ளிடம் ஏமாற்றிப் பறிக்கும் தன்மை யுள்ளவரென்றும், இவ்விதமே தம் மையும் ஒரு சந்தர்ப்பத்தில் ஏமாற்றக் கூடுமென்றும், இவ்வித நட்பு வேண்

டாமென்றும் தீர்மானித்துவிட்டு, வெளிக்குமட்டும் நண்பரைக் கொண்டாடி, அது முதற்கொண்டு மெதுவாக விலகிக்கொள்வதானூர். மற்ற இடத்தில் அயோக்கியனாக நடப்பவன் தன்னிடத்திலும் அவ்விதமே அயோக்கியமாக நடக்கலாமாதலின், இவ்வித நட்பிலிருந்தும் பிரிந்து விடுவதே உத்தமம்'' என்றார்.

ஃ

“தனது நண்பரின் வீட்டுக்குச் செல்வோர் அங்குள்ள குழந்தைகளிடமும் அன்புள்ளவராக இருப்பின் தான் அந்த நட்பு நீடிக்கும். இவர்கள் சென்றதும் அவ்விடமுள்ள குழந்தைகள் கபடமற்று இவர்களைக் கட்டிப் பிடித்துக்கொள்ள வருகின்றன, இவர்கள் அக்குழந்தைகளைத் தூரத்தள்ளிவிட்டு அவர்கள் தன்னிடம் நெருங்குவதை ஒரு அசங்கிதமாகக் காண்பிப்பார்களாயின் அது அவ்வீட்டிலுள்ள நண்பருக்குக் கசப்பாகப் படுகின்றது. தமது குழந்தைகளைக் கண்டித்துத் தூரப் போகும்படியும், அந்த நண்பரை நெருங்கவேண்டாமென்றும் அதட்டுரர். இவ்விதம் குழந்தைகளை அதட்டி ஓட்டுவதைவிட, இந்த நண்பரே தமது வீட்டைவிட்டு எழுந்து சென்றுவிடுவது மேலென்றும் எண்ணிவிடுகிறார். இதிலிருந்துங்கூட நட்பின் ஒற்றுமை குறைந்துவிடுவதுமுண்டு. ஒரு வீட்டில் உள்ள குழந்தைகளை வெறுத்துவிட்டு, அவ்வீட்டாருடன் நேசம்—உறவு பிடிக்க முடியாது'' என்று தாண்டவக்கோன் சாற்றினர். ஃ

அந்தோணிமுத்து பேச எழுந்தார்:—“சிலர் தமது நண்பர்களிடம் தமதுடம்பாச்சாரித்தனத்தைக் காண்பித்துக்கொள்கின்றனர். தமக்கு மிக்க தாகமென்று ஒரு அணுவுக்கு ஒரு சோடா புட்டியை வாங்கிவரச் சொல்லி, அதில் கால்பாகம் குடித்து விட்டு மற்றதைப் புட்டியுடன்வைத்து விட்டார். இதென்ன டம்பம் என்று அருகிலிருந்த நண்பர் வியப்புற்று, இவ்வித ஆரவாரமுள்ளவரின் நட்பு தமக்கு வேண்டாமென்று ஒதுங்கிக் கொண்டார். சில நண்பர்களின் துணப்போக்கை ஒரு சிறு செயலிலிருந்தே கண்டறிந்துவிடலாம். ஒருவருடைய நட்பு கிடைப்பது எவ்வளவோ கஷ்டம்; அதிலும் அது நமக்குப் பொருந்தி வருவது அதை விடக் கஷ்டம்'' என்றார்.

ஃ

“நண்பர்களைச் சந்திப்பதிலும் ஒரு நிதானம் வேண்டும். அடிக்கடி சென்று தம் நண்பர்களின் வேலைக்குத் தாம் இடையூறாக இருக்கவொண்ணுது. தம் நண்பன் வேலை செய்து கொண்டிருக்கையில் அடிக்கடி பேசுவதில் அவனது வேலை கெட்டுவிடுகின்றது. இதில் இருவகை உண்டு. ஒருவர் வேலைசெய்துகொண்டிருக்கையில் மற்றொரு நண்பர் அங்கு வரினும், அவரும் அந்த வேலையில் பங்கு பெற்று நண்பனேடுகூடவே தாமும் வேலைசெய்து உதவியாகிறார். இவ்வித நண்பர்களின் வருகை தொந்தரவு விளைக்காது. தம் நண்பனின் வேலையைத் தாமும் துணையிருந்து செய்யச் சக்தியற்றோர் பலர் உண்டு. அத்தகையோர் அந்த வேலைநேரத்தில் செல்லாதிருப்பதே உத்தமம்'' என்று திம்மப்பர் நவின்றார். இத்துடன் நமது கடையும் முடிவுபெற்றது.

‘பகதூர்’ பொன்வண்டு செட்டியார்.

---

சங்கல்பம் செய்துகொண்டால் மாத்திரம் காரியம் முடிந்துவிடாது. காரியத்திற்கு அவசியமான சிரத்தையும் சிரமமும் வேண்டும்.

# " அமிர்த குணபோதினி "

## ஆங்கீரஸ வருஷத்திய வைகாசி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங். | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | [சூன்யதிதி. |
| அ-சி | 14 | 1 | சனி | அஷ்-3-1, உப-56-18, மக-33-42, தஞ்சைகருடன் |
| சி-அ | 15 | 2 | ஞா | தச-53-56, பூர-30-57, திருக்கண்ணபுரம்-பகழவண் ணர்-கருடன் சூன்யதிதி. |
| சி | 16 | 3 | திங் | ஏகா-47-11, உத்-26-47, ஸர்வைகாதசி, சிங்கபெரு மாள் கோவில் ரதம். |
| சி | 17 | 4 | செவ் | துவா-39-17, ஹஸ்-21-21, துவாதசிதிதி. [ஜயந்தி. |
| சி | 18 | மே (5-3) 5 | புதன் | திர-30-37, சித்-14-56, பிரதோஷம், ஸ்ரீ நரசிம்ம |
| அ-சி | 19 | 6 | வியா | சசி-21-29, ஸ்வா-7-59, மடஸ்ரீ நரசிம்மஜயந்தி, திதி துவயம், கஞ்சிகருடன், அர்த்தநாரீசுவரர் விரதம். |
| சி-ம | 20 | 7 | வெள் | ○ 12-13, உப-52-56, விசா-0-44, கரிநாள் பிர-திதி |
| சி | 21 | 8 | சனி | பிர-3-12, உப-52-3, கேட்-47-37, மிதுனயனம் 17-8 அவமா வைசாகபகுளம். |
| அ-சி | 22 | 9 | ஞா | திரி-48-33, மூல-42-44, சேலம் அழகர் தேர். |
| உ-ம | 23 | 10 | திங் | சது-43-30, பூரா-39-26, கஞ்சி வரதர் ரதம். |
| பி-சி | 24 | 11 | செவ் | பஞ்-40-23, உரா-38-3. |
| சி-பி | 25 | 12 | புதன் | ஷஷ்-39-23, ஶ்ரு வ-38-45, சித்திரகூட தீர்த்தம். |
| சி-ம | 26 | 13 | வியா | ஸப்-40-28, அவி-41-34. |
| சி | 27 | 14 | வெள் | அஷ்-43-33, சத-46-16. |
| ம-சி | 28 | 15 | சனி | நவ-48-17, பூட்-52-29. |
| அ | 29 | 16 | ஞா | தச-54-4, உட்-59-47, கரிநாள். |
| சி | 30 | 17 | திங் | ஏகா-60-0, ரேவ-60-0, திருதினஸ்பிருக் கரிநாள். |
| சி | 31 | 18 | செவ் | ஏகா-0-28, ரேவ-7-35, ஸர்வைகாதசி. |
| ம-சி | 1 | 19 | புதன் | துவா-6-50, அசு-15-20, பிரதோஷம். |
| சி-ம | 2 | 20 | வியா | திர-12-48, பர-22-38, சிவராத்திரி. |
| சி-ம | 3 | 21 | வெள் | சசி-18-3, கிரு-29-14, கிருத்திகை, அமாதிதி. |
| அ-சி | 4 | 22 | சனி | ● 22-26, ரோ-34-55, அதிதி. |
| சி | ஜூன் 5 | 23 | ஞா | பிர-25-51, மிரு-39-47, ஜ்யேஷ்டசுத்தம், பிரதமதிதி. |
| சி-அ | 6 | 24 | திங் | துவி-28-19, ஆரு-43-37, சோபபதம், கலிகி-பவுத்த ஜயந்தி ஸபர்மீ 1வ |
| சி | 7 | 25 | செவ் | திரி-29-47, புந-46-31, ரம்பா கௌரீவிரதம், திருக் [கழுக்குன்றம் உத்ஸவம். |
| சி | 8 | 26 | புதன் | சது-30-14, பூச-48-26. |
| சி-அ | 9 | 27 | வியா | பஞ்-29-41, ஆயி-49-16, திருமாகாளம் யாகஉத்ஸவம் |
| ம-சி | 10 | 28 | வெள் | ஷஷ்-27-59, மக-49-8, ஆரண்ய கௌரீ விரதம். |
| சி-உ | 11 | 29 | சனி | ஸப்-25-11, பூர-47-42, நவதிருப்பதி கருடன். |
| அ | 12 | 30 | ஞா | அஷ்-21-11, உத்-45-10, திதிதுவயம். |
| சி-பி | 13 | 31 | திங் | நவ-16-2, ஹஸ்-41-27, பர்வதாரோகணம், தசமிதிதி. |

| | | | |
|---|---|---|---|
| | குஜ புத | ரவி | சுக் |
| ரா | 15வக்கு | | குரு |
| சனி | ராசி | | கே |
| | | | |

" அமிர்த குணபோதினி " பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932.